உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானஸம்பந்தகுருப்யோநமஃ.

# ஸ்ரீவல்லாளதேவர்

## சரித்திரக்கீர்த்தநம்.

இஃது

"வைதிக சைவசித்தாந்த சண்டமாருதம்"

ஸ்ரீலஸ்ரீ - சோமசுந்தரநாயகரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

ம-ள-ள-ஸ்ரீ,

சி - பச்சையப்பநாயகரவர்களால்

இயற்றப்பட்டு,

ம-ள-ள-ஸ்ரீ,

கோ-நா-விஜயராகவநாயகரவர்களால்

இராகதாளங்களமைக்கப்பட்டு,

வன்னியகுலோத்தமர்

ம-ள-ள-ஸ்ரீ, கோபாலநாயகரவர்களால்,

சென்னை

ஸ்ரீமட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1896வரு

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

"வைதிகசைவசித்தாந்த சண்டமாருதம்"

**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயகரவர்கள்**

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்.

உலகுபுகழ் மூவேந்தர் பெருமையுரைத் திடினவர்தா முமையோர் பாக, னலமிகுகூ றெனமறைக ணவிற்றிடுமாங் கவராரன் ஞாயி றோடு, நிலவுமதி மரபில்வரு நீராரமவருண் முத னின்ற வேந்தர், குலதிலக னெனவருவோன் வல்லாள னெனும்பெயரைக் கொண்டு வாழ்வோன். (க)

மல்லமை சல்லமை யெனுந்தேவிய ரிருவருடன் கூடிம கிழ்ந்துசோணை, யெல்லையமர்ந் தரசுபுரிந் திடுகாலை மகப்பே றொன்றில்லாத் துன்ப, மொல்லைவருத் திடவதனு ளுள்பொருள்யா வையுமடியார்க் குவப்பி னீந்து, தொல்லைவிட மயின்றபிரா னடிக்கமலந் தொழுதுதவஞ் சூழ்கின்றான். (உ)

அரசனுயர் தவநிலையை யளந்திடுவா னருணைவளம் பதியி லன்பி, னுரமிகுவே தியர்மனைக டொறுமவர்பா லொப்பந்த மொருத்திநீங்கா, தருள்பெருகு சங்கமராய்த் தனித்தனியே கொண்டெவர்க்கு மாதிமூர்த்தி, வரமுடைய வல்லாள னகந்தேடி யடைந்தவனை வாழ்த்திநின்றான். (ங)

சங்கமராய் வந்தசிவன் றொழுது வல்லாளன் சாமி நீர்தா, மிங்கடைந்த தியம்புகென விறைவவொரு பெண்வேண்டி யெய்தி னேனின், பங்கிலெனை வரனதற்குப் பார்த்திபனு மிசைந்தனனப் பரிவு தேர்ந்து, தங்கமதி யமைச்சர்மடவரலொருத்தி வேண்டிமனை தோறுஞ் சென்றார். (ச)

போனவிடந் தோறுமுள புதுமையறிந் தமைச்சர்மனம் புழுங்கித்தங்கள், கோனையடைந் தியம்புதலுங் குறித்தசெய ன் முடிவையுளங் கொண்ட கோமான், வானவர்நா யகர்செ யலோ வல்வினையேன் றவமிதுவோ வகையே தென்றே, பா னல்விழி யாரிருவர் தேவியர்கேட் டுளம்பதைக்கப் பன்னி னனே. (௫)

ஆங்கவருண் சல்லமையாந் தேவியடி பணிந்திறைவ ன ன்புநீடத், தேங்குவதென் னடியாளைச் சங்கமருக் கீந்துறுதி சேர்வீரென்றாள், மாங்குயினன் மொழிமடவாள் வாக்குறுதி தேர்ந்துமன மகிழ்ந்துநீறு, தாங்குமடியார்மகிழத் தந்துகளித் தனன்மனைவி தன்னைமன்னன். (௬)

சங்கமர்சந் நிதிமருவி சல்லமையன் பொடுதழுவச் சாரு ங்காலைச், சங்கமகோ லந்தணந்து சங்கரனோர் பசுங்குழவி தானயம்மை,அங்கமுழு துங்களிக்கத் தாயெனக்கொண் டவ ண்முலைப்பா லயின்று காவென், றெங்குளபே ரும்வியக்கவழு தருட்கோ லங்காட்டி யிருந்தான் மன்னே. (௭)

பிள்ளைகலி தீர்ந்தரசன் பிஞ்ஞகனைத் தனதுமகப் பேறா ய்ப்பெற்ற, வுள்ளமகிழ்ச் சியினலவ்வுமைகேள்வன் றிருவடித் தொண் டுறுதியாகப், பள்ளமடை யாய்ச்செலுத்திப் பரனரு ள்பெற் றுய்ந்தனனிப் பாரில்யாரே, கொள்ளுமுணர் வினரா கி யித்தகைய பெறும்பேறு கூடினாரே. (௮)

இச்சரிதந் தனையுலகி லெளிதின்றிந் தாநந்த மெய்தவீ சன், செச்சைமல ரடிவிழைந்து கனிந்தமனத் தானன்பு சிற க்குமேலாம், பச்சையப்ப னெனும்பெயரான் பரிவொடுகீர்த் தனமாகப் பாடியார்க்கு, மிச்சையுட னல்கினனிங் கிவனிசை த்த வுபகரிப்புக் கெதிர்வேறுண்டோ. (௯)

இன்னுமிவன் சிவநாம கீர்த்தனங்க ளிசைத்திருக்கு மி யல்பு தன்னை, யுன்னிமகிழ்ந் திடுவர்பெரி யோரவைதாமுமை கேள்வ னுபயபாத, மன்னியபே ரன்புருவாய் வயங்குதலான் மற்றவற்றின் மாண்பு தேர்ந்து, துன்னுமவை யென்றுமுல கினில்வாழ்க வென்றனிசந் துதிப்பாமன்றே. (௰)

திருச்சிற்றம்பலம்.





சிவமயம்.

*திருச்சிற்றம்பலம்.

# சாற்றுகவிகள்.



சென்னை கிறிஸ்டியன்காலேஜ் தமிழ்ப் பிரதம பண்டிதர்.

**ம-ா-ஸ-ஸ்ரீ-திரு-சின்னசாமிப்பிள்ளையவர்கள்**

இயற்றியன.

கலிப்பா.

வில்லாரும் பொன்மலையை வில்லாக வளைத்தபிரான்
அல்லாரு முளத்தினரா யயனொடுமால் தனித்தனியே
கல்லாத புல்லியரிற் கனன்றுபர மென்றவிர்ப்பா
னெல்லாரு மழற்கிரியா யினிதமர்ந்த திருவருணை. (க)

வளமமருந் திருப்பதிக்கண் வன்னிகுல முனம்புரிந்த
வளவில்பெருந் தவமுருவா யவனிமிசை வந்ததென
வுளமகிழ்ந்திவ் வுலகேத்து மொப்பில்புக ழொடுநாளு
மிளிர்தருசீர் வல்லாள வேந்தன்பால் சங்கமன்போல் (உ)

சென்றருளி யன்னவன்றன் றிருத்தேவி யார்தமையேற்
றன்றிரவவ் வாயிழையை யணைவான்போ லமர்ந்தருளி
யென்றுதயத் திளங்குழவி யெனவமர்ந்தன் பாரிறையே
யென்றுமினைக் கிரும்புதல்வன் யாமேயென் றருள்புரிந்த (ங)

அப்பெரிய மான்மியத்தை யக்குலத்தண் ணாமலைமால்
நற்புதல்வன் பச்சையப்ப நாயகவே ளிசைத்தமிழி
னிப்படியோ ரெளிதுணர்ந்தீ டேறுவா னியற்றினனால்
மெய்ப்புலவர் யாருநனி வியந்துகளி கூர்ந்திடவே. (ச)

---

திருமயிலைவித்வான்

**ம-ா-ா-ஸ்ரீ சண்முகம்பிள்ளையவர்கள்**

இயற்றியன

தவமலியுந் திருத்தொண்டர் திறமுலகிற் கொருதொண்டத் தொகையிற் சாற்று, நவமலியும் புகழ்பெருகு மாரூரரவதரித்த நலஞ்சானவற், சிவமலியுந் திருநகரைத் தன்னிடங்கொண் டொருபெண்ணைத் திருநாடென்ன, அவமலியும் புகழ்பெருக் கார்கிறைநடு நாடெனக் கரையுமந்த நாட்டில். (க)

எம்மையுமா ளுடையபிரான் மாலயனுக் கறியாமை யெ ன்று நீண்ட, செம்மையுரு வந்தடங்க ணம்மைபுரி தலச்சிற ப்பு தெய்வத்தீர்த்த, மும்மைமரு வும்பொழிலு முருணை யென முத்திநக ரென்னவோங்கி, எம்மையுநல் கியபதியிற் றபனகுலத் தரசென்ன வியம்ப நின்றோன். (உ)

கல்லானைக் கரும்பருத்துஞ் சித்தனடி யல்லாமற் கருத ல்லான், சொல்லாரு மவனடியார் தமையன்றி யுறவறியான் றொழும்பேயன்றி, நல்லாத ரங்கொள்பணி வேறறியா னென வுலக நயக்குஞ்சீர்த்தி, வல்லாள னெனுமரையன் மகப்பேறு கருதியே வாழுநான்று. (௩)

பேறனைத்துந் தருமடியர் தமக்கடிசி னல்கினெனப்பெரி யோர்கூறத், தேறியவ்வா றுஞற்றிடமற் றானவனைச் சோதி த்துத் திறம்பாவண்ண, மாறிலொரு மகவாக வந்தசரி தந்த னையிம் மகிமீர்வைப்பிற், கூறியுண ரப்பலநீர்த் தனவடிவாத் தந்துபுகழ் குயிற்றினால். (௪)

இனையன்யா ரெனினறைது மவன்குலத்தின் வருமைந் தனிந்தஞான்று, நனையனைய புகழ்மருவு வைதிகநற் சைவ சண்ட மாருதப்பேர், புனையுமொரு சோமசுந் தரக்குரிசில் கழன்மலரே போற்றுசீரான், தனிமுதல்வன் றிருத்தொண் டே புரிந்தொழுகும் பச்சையப்பன் றமிழ்வல்லோனே. (௫)

---

திருவோத்தூர் வாசி

## ம-௱-௱-ஸ்ரீ, ம-தி-பானுகவி யவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சீர்பூத்த திருநதியின் சிறப்பினொடு விளங்கருணைத் தே த்துமுன்னாள், ஏர்பூத்த வுமையொருபா லுடையபிரான் வல்லாள னிடத்திற்செய்த, நார்பூத்த சரிதமதை யிசைத்தமி ழா னினிவிளங்க நலமாச்செய்தான், பார்பூத்த புகழ்பரவு பச்சையப்பப் பூபனெனும் பாவலோனே.

அஷ்டாவதானம்

ம-ா-ா-ஸ்ரீ,

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.

விண்டயன்சு தந்தரமில் பசுக்களெனு முண்மையினை விளங்கக்காட்டி - மேவருணை யம்பதியின் பதியொருநற் சுதனுக விழைந்தங்காண்ட, மண்டலிக னெனவுலகி னைப்புரந் தாண்டவுயர் வள்ளலான - வல்லாள தேவர்சரித் திரமதனைக் கீர்த்தனமா வகுக்கவெண்ணிப், பண்டயங்கு மியலிசைநா டகப்பண்பின் பாவனைகள் பலவுங்காணப் -; பகர்தொடை சொற்பொருணயங்கற் பனையலங்காரமுறப் பரிந்துசொற் ருன், றண்டமிழிற் போதகா சிரியனண்ணுமலைசெய் தவத் தால்வந்த - தமைசாந்த மிகைகுணப் பச்சையப்ப நாவல ஞஞ் சதுரன்றனே.

---

குன்றத்தூர் ம-ா-ா-ஸ்ரீ, மதுரகவி

## மாணிக்கமுதலியாரவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பாயுமலை யுடைப்புவியில் வினைவயப்பட் டணியிழையா ர் பண்டிவந்து, மாயுமரி யயன்முதலாம் வானவரைப் போலா து மனவாக் கெட்டாத், தாயுமிலி தந்தையிலி யெனமறைக ளோலமிடுஞ் சம்பு வெந்தை, யாயுமுளத் திச்சையினு லரு ண்மேனி கொடுகுழவி யாகி யன்றே. (க)

வல்லாள நிருபனுயர் மெய்யன்புங் கொடைத்திறனு மகி தலத்தில், எல்லாரு முணர்ந்துய்யக் காட்டியருள் புனிதமிகு மினிய காதை, சொல்லானும் பொருளானுஞ் சுவைமலிந்து பத்திரசந் துலங்கித் தோன்றக், கல்லாருங் கற்றவரு நனிமகி ழக் கீர்த்தனையாக் கழறி ஞைல். (உ)

அத்தகையோ னியாரென்னி லரவிந்தத் திருமடவா ரம ர்ந்து நாளுஞ், சித்தமகிழ் தருசென்னைச் சிந்தா திரிப்பேட் டை சிறக்க வந்த, உத்தமனண் ணுமலைப்பே ருரவோனற் றவத்துதவு மோங்கு சைவ, பத்திநெறி முத்திநெறி யெனத் துணிந்த பச்சையப்பப் பாவலோனே. (ங)

சென்னை கிறிஸ்டியன்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
ம-௱-ஸ்ரீ, ஆ-சுப்பராயநாயகரவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உம்பர்குழாந் தினமெய்தி யுறுவருட னளவளா யுளத்தி னுடி, யிம்பர்குழா முறவன்பை யினிதிலுறு தலமீதென் றெவரும் போற்ற, நம்பர்குழா மெனவார்ந்து நனியடியர் சிவமனைவை நலத்தோ டெய்த, வம்பர்குழா முறவீசு பொழிலுடுத்த நடுநாடாய் வழங்கு நாட்டில். (க)

தாம்பரம மெனப்பெரும்போர் புரியயன்மால் வீறழிந்து தளர்ந்துமாழ்கி, நாம்பரம மெனவிழிவென் றுளத்துணர வழற்பிழம்பாய் நண்ணியன்றே, ரேம்பலுறப் புரிந்தவர்க்கின் னருள்புரிந்து பரத்தியல்லை யின்றுங் காட்டி, யாம்பலுறு கிரிவடிவா யமலனமர் திருவருணை யகத்து முன்னாள். (உ)

முக்கணன்ற னடுவிழியா மழற்குலத்து வருஞ்சேர முனியேபோல, மிக்கவெழி லுலவுறுமவ் வியன்குலத்தி லவதரித்து மேன்மை வாய்ந்தோன், தக்கவர னடியர்கொளத் தனதெனப் பொருளளித்த தருமசீலன், பொக்கமிலன் புருவாகி யுலகாண்ட வல்லாளப் புனிதன் றன்பால். (ங)

செயற்கையுரு வில்லாநஞ் சிவபெருமா னந்தணராய்ச் சென்றுமேவி, யியற்பகையே மனையாளை யீதியென வாடல்புரி யியலேபோல, மயற்கையறு பூதியணி சங்கமவே டத்தோடு மருவிநின்றே, கயற்கண்மட வாள்வேட்டங் கவனீந்த காரிகையைக் கலப்பான்போல. (ச)

ஆடல்புரிந் தருங்குழவி வடிவாகி யமர்ந்தன்னோர்க் கருளையீந்த, பாடமைசீர்ச் சரிதமதை யிசைத்தமிழா னனிவிளங்கப் பகர்ந்தான் சீர்த்திக், காடரங்கா யக்குலத்தில் வருமண்ணு மலமகிப னளித்த செம்மல், கேடறுசீர் வடகலையுந் தென்கலையு மினிதுணர்ந்த கேள்வி யாளன். (ரு)

சிவமணத்தை யுலகடைய வினிதுணர்த்தும் பிரசங்கச் செம்மை வாய்ந்த, தவமலிசைவ சித்தாந்தசண்ட மாருதமெனவித் தரணி போற்று, முவமையில்சீர்ச் சோமசுந் தரகுருவி னடிமலரை யுளங்கொண் டுற்றோன், நவமலிசிந்தா திரிப்பேட்டையினிலுறு பச்சையப்ப நாவலோனே. (சு)

திருச்சிற்றம்பலம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்தகுருப்யோநமஃ.

# ஸ்ரீவல்லாளதேவர்

## சரித்திரக்கீர்த்தநம்.

### விநாயகர்துதி.

வெண்பா.

சிவபரத்வங்காட்டுந் திருவருணையாளுந்
தவவுருவல்லாளன் றனக்குச்—சிவன்சுதனாய்
வந்தருள்சீர்கீர்த்தனமாய் வாழ்த்தகஜவதனன்
கந்தசரணம்புயமே காப்பு.

### சிவபெருமான்துதி.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அகரமென வுயிர்க்குயிராய்ப் பொலிந்தருளும் பெருமானை யமுதன் றனை, நிகரிலுரு வருவுபய மகன்றானைச் சுகானந்த நிறைவா னனைப், பகர்ரிய மறைமுடிமே னடம்பயிலும் பரம்பொருளைப் பற்றில்லானை, மகரமலர்க் குழலுமையாட் கினியானைப் பவமகல வணங்கி வாழ்வாம்.

### உமாதேவியார்துதி.

உலகமெலா மீன்றளித்துங் கன்னியெனத் திகழ்வாளை யொப்பிலாளை, இலகுறநா லெட்டறமு மன்பினொடும் வளர்த்தாளை யிறைவன் றனைப், பலவுயிருந் தொழுதுய்யுந் திறங்காட்டத் தவக்கொழுந்தாய்ப் பழிச்சினாளைக், கலைமகளுந் திருமகளும் பணியுமுண்ணா முலையாளைக் கருதி வாழ்வாம்.

### சிவசுப்ரமண்யர்துதி.

ஓங்குமறைக் குயிராகும் பிரணவத்தி னுண்மையினை யுணரகில்லாப், பூங்கமலத் தவிசிலொளி ரயனையருஞ் சிறை

யிருத்திப் பொருப்பு வில்லைத், தாங்குசிவ பெருமானுக் குப தேச முரைத்தருளுஞ் சண்முகன்றன், றேங்கமழுஞ் செம் பதுமத் தாட்டுணையைப் பரிந்துநிதஞ் சென்னி சேர்ப்பாம்.

## நந்திதேவர் துதி.

கலிநிலைத்துறை.

சீருலாந்திருக்கயிலை யங்கிரிபுலிற்றிகழுங்
காருலாங்கடுவிட மலிந்தெழின்மிகுகண்டன்
தாருலாம்பதம்பணி சுரர்தனித்திருமுடிமேல்
நேரிலாப்பிரம்போச்சு மாநந்தியைநினைப்பாம்.

## சமயகுரவர் துதி.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சிவமலாற்பரம்வேறில்லையென்றுலகந்
    தேர்ந்தினிதுய்யவேயருளால்
அவமுலாங்கள்ளப்புத்தரைக்கொடிய
    வமணரைக்கடிந்தரன்புகழை
நவநவமாகவற்புதத்தாலு
    நற்றமிழாலுமேவிளக்குஞ்
சிவந்திகழ்சமயாசாரியர்நால்வர்
    செம்பதப்போதுவாழ்த்திடுவாம்.

## அறுபத்துமூவர் முதலியோர் துதி.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சுருதிமுடிமேனடங்குயிற்றுந்
    தூயசிவசங்கரன்றுணைப்
பரவியுயிர்கள்கருவடைக்கும்
    பான்மையீதென்றுணர்த்திடுவான்
புரிவாய்ப்பாரில்வந்தவறு
    பத்துமூவரொன்பதின்மர்
திருவாரேனைச்சிவனடியார்
    திருத்தாளென்றன்முடிக்கணியே.

# சரித்திரக்கோர்த்தரம்.

## சந்தானகுரவர்துதி.

### கலிவிருத்தம்.

வேதசாரமிலெந்தசித்தாந்தமே
காதலாலுலகோர்ந்துக்திபெறக்
கோதினூல்பலகூறுசந்தானமா
போதஞானக்குரவரைப்போற்றுவாம்.

## குருவணக்கம்.

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவம்பெறவுயிர்கள்காழிவந்தருளுஞ்
செம்மலாரின்னருள்பருகி
அவமிகுவஞ்சப்புறச்சமயத்தோ
ரகந்துடித்தயர்ந்திரிந்திடவே
நவநவமாகச்சுருதியாற்சிவமே
நற்பரம்பொருளெனக்காட்டுந்
தவமிகுசோமசுந்தரக்குரிசில்
தாண்மலர்த்துணைகள்வாழியவே.

## அவையடக்கம்.

சிற்பரன்சிவனென்றுமாமறை
தேடிநாடருமெம்பிரான்
அற்பினொலொருபாலனுப்த்திரு
வருணைவேந்தனுக்கருள்செயும்
பொற்பினுஷிதுமான்மியந்தனைப்
போற்றுவார்குறைநோக்கிடார்
சொற்பொருட்சுவையாய்ந்தபாவலர்
சோதியாதெகமையாள்வரே.



என்னும் ஸ்ரீ அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் திருவாக்கால் அண்டஜம், சுவேதஜம், உத்பீஜம், சராயுஜமென்னும் நால்வகை தோற்றத்தையுடைய எண்பத்துநான்கு நூறாயிரம் பேதங்களைப்பொருந்திய பல்வகையோனிகளையும் பொருந்தியவற்றை யொழிந்து மானிடனாகப் பிறத்தலை விசாரிக்குமிடத்துக் கடலைக் கையினால் நீந்திணகாரியம்போலாம், என்று பெறப்பட்டதனால் விளங்கும். மேலும்,

"அரியதுகேட்கின் வரிவடிவேலோய்
அரிதரிது மானிடராதலரிது
மானிடராயினுங் கூன்குருடுசெவிடு
பேடுநீக்கிப் பிறத்தலரிது
பேடுநீக்கிப் பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியு நயந்தகாலையும்
தானமுந்தவமுந் தான்செயலரிது
தானமுந்தவமுந் தான்செய்வராயின்
வானவர்நாடு வழிதிறந்திடுமே."

என்னும் மூதாட்டியின் திருவாக்கால் ஒருசீவன் மானிடஜனனமாகிவருதல் மிக அரிது அதிலும் குறள்-கூன்மை-செவிடு-குருடு-மூடம்-உறுப்புமயக்கம் - உறுப்பில்பிண்டம் என்னும் எண்வகை உடற்குற்றங்களின்றி உறுப்பனைத்துங் கூடிப்பிறத்தலரிது. அப்படி பிறக்கினும் ஞானமுங்கல்வியும் நயந்து தானமுந்தவமுஞ்செய்யின் சுவர்க்கலோகத் தின்பம்பெறுவது திண்ணம் என்று ஏற்பட்டது. இதனால் மானிடப்பிறவியே மேலானதென்றும் அதற்கின்றி யமையாத லட்சணங்களிவையென்றும் விளங்குகிறதல்லவா.

மனம்; ஆம் இவ்வரிய மானிடப்பிறவியினால் அடையத்தக்க பிரயோசனந்தான் என்னே.

விவேகம்; "உலகனைத்திலுக்கு மொண்ணுதன்மேவிட்ட திலகமெனப்பெறினுஞ் சீசீ-இலகியசீர்

ஈசா திருக்கயிலை யெம்பெருமான் என்றென்றே
பேசா திருப்பார் பிறப்பு."

என்னும் நக்கீரதேவர் திருவாக்கால் உலகமெல்லாம் மதிக்கத்தக்க பெருஞ் சிறப்புப்பொருந்தியவரா யிருப்பி னும் ஈசா திருக்கயிலையெம்பெருமான் என்று துதியா தவர்களுடைய ஜன்மம் ஒரு ஜன்மமா-சி-சி-காதியுமிழ த்தக்கதே என்றும்,

"அரியானை யந்தணர்தஞ் சிந்தையானையருமறையி னகத்தானை யணுவையார்க்குந், தெரியாததத்துவ னைத் தேனைப்பாலைத் திகழொளியைத் தேவர்கட ங் கோனைமற்றைக், கரியானைநான்முகனைக் கன லைக்காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே."

என்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாக்கால் திருச் சிற்றம்பலத்தின்கண் அனவரதத்தாண்டவம் புரிந்தரு ளும் ஸ்ரீநடராஜவள்ளலைப் புகழாத நாள்களெல்லாம் பிறவாநாள்களென்றும் பெறப்பட்டதனாலும்,

"மானிடப்பிறவிதானும் வகுத்ததுமனவாக்காயத்
தானிடத்தைந்துமாடு மரன்பணிக்காகவன்றோ
வானிடத்தவருமண்மேல் வந்தரன்றனையர்ச்சிப்ப
ரூனெடுத்துழலுமூமரொன்றையுமுணரார்ந்தோ"

என்னும் ஸ்ரீஅருணந்திசிவாசாரியார் திருவாக்கால் மா னிடப்பிறவி வகுக்கப்பட்டிருப்பது யாதுகாரணமென் னில் பஞ்சகவ்வியாபிஷேகத்தைக் கொண்டருளாநின்ற பரமசிவனைத் திரிகரணங்களால் வழிபடுதற்பொருட்ட ன்றோ வானுலகத்துள்ளவர்களும் பூமியில்வந்து சிவ பெருமானை யர்ச்சிப்பார்கள் இவ்வுலகத்து மானிடயா க்கையைப்பெற் றுழலுமூமர்கள் ஐயோ அந்தயாக்கை யின் பெருமை யொன்றுமறிய மாட்டார் என்றும் பெ றப்பட்டதனாலும் சிவபெருமானை வாழ்த்தியவன் திரு

வருளைப்பெற முயலுவதே மானிடயாக்கையின் பிரயோசனம். அருள் என்பது கடவுளினது தயை.

மனம். சிவனருள் எப்படி கிடைக்கும்.

விவேகம். ஜீவகாருண்யத்தால் அதாவது ஜீவதயையினால், எங்ஙனமெனின், தயையைக்கொண்டு தயையைப்பெறுதலும் விளக்கத்தைக்கொண்டு விளக்கத்தைப்பெறுதலும் கூடும் மற்றொன்றால் பெறக்கூடாமை அநுபவமாகலின்.

மனம். ஜீவதயையென்பதென்னை.

விவேகம். ஜீவர்கள் விஷயமாக ஜீவர்களுக்கு உண்டாகும் ஓர் உருக்கம். துன்பப்படும் ஜீவர்களுக்கு அவ்வுருக்கத்தால் தருமத்தைப்புரிபவர்கள் கடவுள் அருளைப் பெறுவது திண்ணம்.

மனம். தருமமாவதென்னை.

விவேகம். இரப்போர்க்கில்லையென்னாது ஈதல்.

மனம். இரப்போர்தன்மையும் அன்னோர்க்கீயாத லோபிகளின தன்மையுஞ் சொல்லவேண்டும்.

விவேகம். (கதேபங்கஸ்வரோ ஹீநஃகாத்ரச்சேதோமகத்பயம் மரணேயாநிசிங்நாநி தாநிசிங்நாநியாசகே)

என்றபடி இரப்பவனுக்கும் பிணத்துக்கும் பேதமில்லை எங்ஙனமெனின் பிணத்துக்கிருப்பதுபோலவே யாசகனுக்கும் கமனபங்கத்வம் - தொனிஹீனத்வம்-தேகமெலிவு. மிகுந்தபயம். ஆகியகுறிகள் உண்டாயிருக்கின்றன. மேலும்,

(காத்ரம் சாஷ்டவிதஸ்தி யாத்ரகம் அபூத் யாசூச்ஞார்த்தமுத்யோக தஷ்ஷண்மானத்வமுபைதி ந்ருபதிக்ருகம் பிராப்தே சதுர்மானதாம் தேஹீதிப்ரியதே த்விமானகம் அபூத் நாஸ்த்யாக்ஷராகர்ணனே நிர்மானத்வமுபைதி.)

என்றபடி தேகம் எண்ஜாண் அளவையுடையது. யாசிக்கமுயன்றபோது ஆறுஜாணுகவும். அரசன் க்ருகத்தை யடைந்தபோது நான்குஜாணுகவும். தேஹீ என்றபோது

இரண்டுஜோளுகவும் நாஸ்தி-யென்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்திலே சேஷம் இரண்டுஜோணும்போய் இறந்தவனுகிருன். ஆதலால் யாசகன் பிணத்தோடொப்பன்.

(உபார்ஜிதாநாம்வித்தாநாம்த்யாகஏவஹிரக்ஷணம் தடாகோதரஸம்ஸ்தாநாம்பரிவாகஇவாம்பஸாம்)

என்றபடி கலங்கலானது ஏரியிலுள்ள சலத்துக்கு ரக்ஷணமாதல்போல, சம்பாதிக்கப்பட்ட திரவியத்திற்குக் கொடுப்பதே ரக்ஷணம்.

(நதேவாயநவிப்ராயநபந்துப்யோநசாத்மனே க்ருபணஸ்யதநம்யாதிவந்ஹிதஸ்கரபார்த்திவைஃ.)

என்றபடி இரப்போர்க்கியாத லோபியினுடைய தனமானது தெய்வத்திற்கும், பிராமணனுக்கும், பந்துக்களுக்கும், தனக்கும், ஆகிறதில்லை. ஆனல் நெருப்பினுலும் திருடர்களாலும் அரசர்களாலும் அபகரிக்கப்படுகின்றது.

(யததோதஃக்ஷிதௌவித்தம்நிசகானமிதம்பசஃ ததோதாநிலயம்க்ந்தும்சக்ரேபந்தானம்க்ரதஃ.)

என்றபடி யாதொருகாரணத்தால் லோபியானவன் பூமியில் அதிககீழே தனத்தைப்புதைக்கின்ருனே அந்தக்காரணத்தால் நரகத்தை அடைவதற்கு எதிரில்வழியைச் செய்கின்றவனுவான்.

(ஆகாரநித்ராபயமைதுனஞ்ச சாமான்யமேதத்பசுபிஃநராணும், தர்மோஹிதேஷா மதிகோவிசேஷோ தர்மேணஹீநாஃ பசுபிஸ்ஸமாநாஃ)

என்றபடி ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம் ஆகிய நான்கும், மனுஷருக்கும், மிருகங்களுக்கும், சமானமாகும், அவைகளுக்குள் தர்மமே விசேஷம், தர்மத்தினல் குறைந்தவர் மிருகத்துக்குச்சமானமாவர். மேற்போந்தபிரமாணங்களால் (இரப்பவன்புவிமீதி லீனனவனுக்கில்லை யென்பவனவனிலீனன்) என்றபடி இரப்பவர் இழிவும், அன்னோர்க்கீயாதலோபிகள் ஹீனத்வமும், நன்ருய் விளங்குகின்றபடியாலும். (தநாத்தர்மம் தத

ஸு-கம்) என்றபடி தனத்தைச்சம்பாதித்துத் தர்மத்தைச்செய்தால் சுகத்தையடையலாமென்று பெறப்பட்டமையாலும், ஓமனமே நீதர்மத்தைச்செய்வாய்.

மனம். இப்போது இளமைப்பருவமுடையேம், ஆதலால் போகாதிகளை யனுபவித்துவிட்டு முதுமைப்பருவம்வந்தபோது செய்யலாமே.

விவேகம் "காலைச்செய்வோமென்றறத்தைக்கடைப்பிடித்துச்
சாலச்செய்வாரேதலைப்படுவர்-மாலை
கிடந்தானெழுதலரிதான்மற்றென்கொல்
அறங்காலைசெய்யாதவாறு."

என்னுந் திருவாக்கால், இளமைப்பருவத்திலேயே தருமத்தைச் செய்பவர் உத்தமராவர், முதுமைப்பருவத்தில் நோயால்படுத்தவன் நோய்தீர்ந்தெழுதல் அருமையாகும். தருமத்தை இளமைப்பருவத்திற் செய்யாமற் போவது என்ன? என்றும்.

"மாய்வதன்முன்னேவகைப்பட்டநல்வினையை
ஆய்வின்றிச்செய்யாதார்பின்னைவழிநினைந்து
நோய்காண்பொழுதினறஞ்செய்வார்க்காணுமை
நாய்காணிற்கற்காணுவாறு."

என்னுந் திருவாக்கால் ஆராய்ச்சியில்லாமல் இறக்குந்தருணத்தை யடையுமுன்னமே பலவிதமாகிய நற்கருமங்களைச் செய்யாமற்போனவர் மரணநோய் உண்டாகுந் தருணத்தில் இறந்தபின்னுகும் வழியைநினைத்தால், தம் வழிக்கானதர்மத்தைத் தாம் சொல்லும்விதம் செய்பவரைக் காணுமற்போவதுகாய் கண்டவிடத்துக்கல்லைக்காணுமற் போவதுபோலும் என்றும்.

"அன்றறிவாமென்னுதறஞ்செய்கமற்றது
பொன்றுங்காற்பொன்றுத்துணை"

என்னுந் திருவாக்கால் இப்போது இளமைப்பருவமுடையோம் முதுமைப்பருவம்வந்தபோது தர்மத்தைச்செய்யலாமென்றிராமல் உடனே தர்மத்தைச்செய்க, அழி

யுங்காலத்தில் அத்தர்மமானது அழியாத்துணையாகும், என்றும் பெறப்படுவதால் முதுமைப்பருவம் வந்தபோது தருமத்தைச்செய்யலாமென்றல் கூடாது. மேலும்,

"கருவினுளழிவதாயும் கழிந்திடாதழிவதாயும்
பரிணமித்தழிவதாயும் பாலனுயழிவதாயும்
தருணனுயழிவதாயும் தானரைத்தழிவதாயும்
உருவவேயழிவேயென்று ளுள்ளபோதேபாருய்ய"

என்னுந் திருவாக்கின்படி, கருவிற் சுக்லரூபமா யழிவதாயும், பிண்டரூபமாகத் தரித்தழிவதாயும், உருவப்பட்டழிவதாயும், பாலனுகப்பிறந் தழிவதாயும், தருணனுகி யழிவதாயும், நரைக்கும் பருவம்வந்தழிவதாயும், இப்படியே முழுதும் அழிவதே யியல்பா யிருத்தலால் தேகமுள்ளபோதே யீடேறும்வழியை யாராய்ந்துபார். என்றும்.

(ஆயுர்வர்ஷஸதம்ந்ருணும்பரிமிதம் ராத்ரௌததர்த்தம்கதம், தஸ்யார்த்தஸ்யததர்த்தமாயுரபரம்பால த்வவ்ருத்தத்வயோ:, ஸேஷம்வ்யாதிவியோகதுக்கஸஹிதம்ஸேவாதிபிர்நீயதே, ஜீவேவாரிதரங்கபுத்புதஸமேஸௌக்யம்குத:ப்ராணிநும்.)

என்னும் பிரமாணப்படி மனிதர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட வயது நூறு, இதிற்பாதியாகிய-50-இராத்திரி தூக்கத்திற்போய்விடும் அதிற்பாதி பாலத்வத்திலும், வ்ருத்தத்வத்திலும், போய்விடும், மற்ற சேஷமாகிய-25-ம்ஷணுத்திரயங்களுடைய பிரிவினுல் உண்டாகிற துக்கத்திலும், சேவகத்திலும், போய்விடும், ஜீவித்திருத்தலோ சமுத்திரத்தில் அலைகளால் உண்டாகிற குமிழிபோல் நிலையற்றதாகும், ஆதலால் பிராணிகளுக்கு சவுக்கியம் என்பதேது? என்றும்.

(அர்த்தாபாதரஜஸ்ஸமாகிரிநதீ வேகோபமம்யௌவனம், மானுஷ்யம்ஜலபிந்து லோலசபலம்பேனோபமம்ஜீவனம், தர்மம்யோநகரோதி நிஸ்ச்சலமதி: ஸ்வர்க்கார்க்களோத்காடனம், பஸ்ச்சாத்தாபஹதோஜராபரிணதஸ்ஸோகாக்நிநாதஹ்யதே.)

என்னும் பிரமாணப்படி-பொருள் பாதநூளிக்குச் சமானமாகும், யௌவனம் மலைப்பிரவாகத்துக் கொப்பானது, மனுஷ்யஜென்மம் நீர்க்குமிழியினுடைய சலனம் போன்றது, ஜீவிப்பது நுரைக்கொப்பானது. ஆதலால் யாதொருவன் சலனமற்றபுத்தியுடையவனுய்ச் சுவர்க்க வாசலின் தாழ்ப்பாளைத் திறக்கத்தக்க தர்மத்தைச் செய்யவில்லையோ அவன் பச்சாத்தாபத்தினல் பீடிக்கப்பட்டவனுயும்,ஜரையினல் ஆக்கிரமிக்கப்பட்டவனுயும், சோகாக்னியால் தகிக்கப்பட்டவனுயும்,வருந்துவன்,என்

"நாக்கடிப்பாகவாய்ப்பறையறைந்து
சாற்றக்கேண்மின்சாற்றக்கேண்மின்
மனிதற்குவயது நூறல்லதில்லை
ஐம்பதிரவில்அகலுந்துயிலினல்
ஒட்டியவிளமையிலோரைந்துநீங்கும்
எழுபதுபோகநீக்கிருப்பனமுப்பதே.

அவற்றுள்

இன்புறுநாளுஞ்சிலவேயதாஅன்று
துன்புறுநாளுஞ்சிலவேயாதலால்
பெருக்காறொத்ததுசெல்வப்பெருக்காற்
றிடிகரையொத்த திளமையிடிகரை
வாழ்மரமொத்தது வாழ்நாளாதலால்
ஒன்றேசெய்யவும் வேண்டுமொன்றும்
நன்றேசெய்யவும் வேண்டுநன்றும்
இன்றேசெய்யவும் வேண்டுமின்றும்
இன்னேசெய்யவும் வேண்டுமின்னும்
நாளைநாளை யென்பீராகில்
நமனுடைமுறைநா ளாவதும்றியீர்
நம்முடைமுறைநா ளாவதுமறியீர்
எப்போதாயினுங் கூற்றுவன்வருவான்
அப்போதந்தக் கூற்றுவன்றன்னைப்
போற்றவும்போகான் பொருளொடும்போகான்
சாற்றவும்போகான் றமரொடும்போகான்

நல்லாரென்று னல்குரவறியான்
தீயாரென்னான் செல்வரென்றுன்னான்
தரியாதொருகணந் தறுகணாளன்."

என்றும் போந்தவாய்மையால், ஓமனமே தேகம்முதலி
யயாவும் அநித்தியம், தர்மம் ஒன்றே இம்மையில்காப்
பதன்றி மறுமையிலும் துணையாய்நின்று சுவர்க்காதி
போகங்களை யடைவித்து எப்பொழுதும் துணையாய்நிற்
கும் என்று அறிவாய்.

மனம். புத்ர பௌத்ர களத்ர மித்ராதிகளெல்லாம் துணையா
காரோ?

விவேகம். "மனையாளும்மக்களும்வாழ்வுந்தனமுந் தன்வாசல்ம
ட்டே, யினமானசுற்ற மயானமட்டேவழிக் கேது
துணை, தினையாமள வெள்ளளவாகினு முன்புசெ
ய்ததவந், தனையாளவென்றும் பரலோகஞ்சித்திக்
குஞ் சத்தியமே."

என்னுந் திருவாக்கால், மனைவிமக்கள் பொருள்முதலான
வைகளெல்லாம் வாசல்மட்டே, சுற்றத்தார்கள் மயான
மட்டுமே, தான்செய்த ஓர்தினை அல்லது எள்ளளவு
தவம் தன்வழிக்குத் துணையாய்நின்று பரலோகத்தைய
டைவிக்கும். என்றும்.

(ம்ருதம்சரீரமுத்ஸ்ருஜ்யகாஷ்டலோஷ்டஸமம்க்ஷிதௌ, விமுகாபாந்தவாயாந்திதர்மஸ்தம்னுகச்சதி.)

என்னும் பிரமாணத்தால் உயிர்நீங்கிய சரீரத்தை மண்
ணாங்கட்டியைப்போலும் மரத்துண்டைப்போலும் நினை
த்துப் பூமியில்போட்டு சுற்றத்தார்கள் முகத்தைத்திரு
ப்பிக்கொண்டு போய்விடுவார்கள், தர்மமோ ஆத்மாவை
ப்பிரியாது கூடவேசெல்லுகின்றது. என்றும்.

(ஏகஏவசுஹ்ருத்தர்மோநிதனேப்யநுயாதியஃ
சரீரேணஸமம்நாசம்சர்வமன்யத்துகச்சதி.)

என்னும் பிரமாணத்தால் உலகத்திலுள்ள பதார்த்தங்
கள்யாவும் சரீரத்தோடு அழிந்துவிடுகின்றன, ஒருவனே

கனே தர்மம் ஒன்றே ஆத்மாவைவிடாது பின்செல்லு
கின்றது, என்றும் பெறப்பட்ட வுண்மைகளால் தருமத்
தைத்தவிர ஆத்மாவுக்குத் துணையாய்நிற்ப தொன்று
ண்டோ?

மனம். இடையவே கிடையாது. ஆனாலும் அத்தர்மத்தினால் உய
ர்வும் புகழுமுண்டென்பதை இன்னம்சிலதிருஷ்டாந்த
வாயிலால் விளக்குவீரா?

விவேகம். அப்படியே செய்கிறேன்கேளும்.

"அறத்தா றிதுவெனவேண்டா சிவிகை
பொறுத்தானோடூர்ந்தானிடை"

என்னும் திருவாக்கால், தருமத்தினால்வரும்பயன் இது
வென்று ஆகம அளவையால் அறிவிக்கவேண்டிய ஆவ
சியகம் இல்லை. சிவிகையைச் சுமப்பவனோடு அதனைச்
செலுத்துவோனிடத்துக் காட்சி யளவையினாலேயே அறி
யப்படும் என்றும் பெறப்பட்டது.

அன்றியும், வீராதிவீரனாகிய அருச்சுனமஹாராஜன் அதி
கபடநாடக சூத்ரசாமர்த்திய சீலராகிய கிருஷ்ணப
கவான் சகாயம் நிரம்பப்பெற்றவனாயும் சர்வலோக சர
ண்யனான சிவபெருமானருளிய பாசுபதாஸ்திரமுடைய
னாயும் இருந்தும் கர்ணமஹாராஜன் செய்ததர்மம் அவ
னிடத்துள்ளவரைக்கும் அவன்தலையைத்துணிக்கச் சக்
தியற்றனனன்றோ. அக்கர்ணன்செய்ததர்மம் முன்னி
ன்று காத்தபடியால் ஆதலால், மனமே கொலை களவு
கட்காம முதலாயுள்ள கொடும்பாவங்களுக்குக் கொழு
க்கொம்பாயிராமல் தயை தாட்சணியம் அன்பு அடக்
கம் பொறுமைமுதலிய நற்குணங்களோடும் இரப்போ
ர்க்கில்லையென்னாது ஈதலாகிய தர்மத்தைச் செய்வையா
னால் சிவப்பிரசாதம்பெறுவாய் திண்ணம் திண்ணம்.

மனம். பேரானந்தத்தோடும் சம்மதித்து தருமத்தைப்புரிந்து
சிவப்பிரசாத மடைந்தவர்களுக்குள் ஒருவர்சரித்திரத்
தைக் கிருபைபுரிவீர்.

விவேகம். அப்படியே சொல்லுகிறேன்கேளும். வேதபடிதமாயுள்ள
ஸ்ரீமத் அருணாசல க்ஷேத்திரத்தி லரசுபுரிந்த வல்லா

ளமஹாராஜன் சர்வயிஸ்வர்ய சம்பன்னனும் சைவாசா ரதுல்யனும் விளங்கினவனுயிருந்தும் புத்திரப்பேறில் லாமல் மிகவருந்தி அதனைப்பெறுமாறு தக்கவர்களு டைய பரியாலோசனையால் யார்யார் எதைஎதை விரும் பிக்கேட்பார்களோ அதை இல்லையென்னுது கொடுப் பேனென்று அறத்துவசத்தை நாட்டித் திரிகரணமும் ஒத்துமிகுந்த சந்தோஷத்தோடு தருமம் புரிந்துவருவ தை உமாசஹாயத்வாதி லட்சணங்களோடுங் கூடியவ ராயும் சமானதிகரஹிதராயும் தேவதேவராயும் விளங் கும் ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமான் அவ்வல்லா ளமஹாராஜனுடைய பக்தியின்திறத்துக்குவந்து தாமே அவ்வரசனுக்குப் புத்திரராய்த்தோன்றிஅருள்சுரந்தனர்.

மனம். சிவபெருமான் பரமபதியானபோது ஒருவருக்குப் புத் திரராய்த்தோன்றினர் எனின், அவர் உற்பத்திக்குக் கா ரணமான தாய்தந்தையரு முண்டென்று ஏற்பட்டுப் பிறப்பிறப்புடைய பசுக்களோ டெண்ணப்படுவரே அவ ரைப் பரமபதியாகிய கடவுளென்று எப்படிச்சொல்லக் கூடும்?

விவேகம். நன்றுகடாயினுய் இப்படிக்கேட்டாலன்றே உண்மைவி ளங்கும். பிறந்திறந்துழலும் ஒன்றைக்கடவுள் என்ப தைக்காட்டிலும் ஓர்குட்டிச்சுவரைத் தெய்வமென்பது உசிதமாகுமே, நமது சிவபெருமான் கிஞ்சித்தேனும் இன்ன அமங்கலத்வமுடையவர் ஆகார் ஆகார். மெய்ய ன்பர்களுக்கு அருள்செய்யும்பொருட்டுப் புத்திரராய் வந்தெதான்றுதானே தந்தையுமானூர், தாயுமானூர், மாம னுமானூர், தோழனுமானூர், சித்தருமானூர், வீரனுமானூர், தூதனுமானூர், மண்சுமக்குங்கூலியாளுமானூர், விறகுத லையனுமானூர், இன்னமனந்தஅருட்கோலங்கள்கொண்டு வில்லாலும், கல்லாலும் அடியும்பட்டிருக்கிருரே. இவை களேயன்றே சிவபெருமானுடைய பரமபதித்வத்தை விளக்குவதற்குப் போந்த பிரபலமான சாட்சிகள்.

மனம். கொஞ்சம் விளங்கக்கூறும் பார்ப்போம்.

விவேகம். இக்காரியங்களிற் பிரவேசித்தால் எடுத்துக்கொண்டவி ஷயம் தடைபடுமன்றோ. ஆதலால் பரமசிவம் புத்திர

ரானதினால் அவருடைய பதித்வம் கெடாமையை நிரூபிக்கிறேன் கேளும்.

மனம். மஹாபாக்கியம் கிருபைபுரிவீர்.

விவேகம். ஜீவர்களைப்போல மாதாஉதரங்களிலுழன்று அவர்களுடைய யோனித்துழும்புகளேறக் கீழேவிழுந்து, புரண்டு, சிலபோதிருந்து, தர்மரணங்களால் நாசமெய்துவதானால் தெய்வலட்சணத்திற்கு ஹானியாகும். சிவபெருமானெடுத்த திருமேனிகளெல்லாம் ஆத்மாக்கள் கருவில் வீழாவண்ணம் காத்தற்குக்கொண்ட கருணைவடிவாகும். இஃது.

"உருமேனிதரித்துக்கொண்டதென்றலுமுருவிறந்த
வருமேனியதுவுங்கண்டோ மருவுருவானபோது
திருமேனியுபயம்பெற்றோஞ் செப்பியமூன்றுநந்தங்
கருமேனிகழிக்கவந்தகருணையின்வடிவுகாணே."

என்னும் அருணந்தி சிவாசாரியசுவாமிகள் திருவாக்கானும் விளங்கும். மேலும்.

"எல்லார்பிறப்புமிறப்புமியற்பாவலர்தஞ்
சொல்லாற்றெளிந்தோந்ஞ்சோணேசர்-இல்லிற்
பிறந்தகதையுங்கேளேம்பெருலகில்வாழ்ந்துண்
டிறந்தகதையுங்கேட்டிலேம்"

என்னும் திருவாக்கால் சிவபெருமான் பிறந்தார் இறந்தார் என்னும் அமங்கலமான்மியம் எந்தநூல்களிலுங் கூறப்பட்டதில்லையென்று பெறப்பட்டது. அன்றியும்.

(நதஸ்யகஸ்சித்பதிரஸ்திலோகேநசேஸிதாநைவச தஸ்யலிங்கம், நகாரணம்காரணாதிபாதிபோநதஸ்யக ஸ்சிஜ்ஜநிதாநசாதிப:.)

என்னும் சுவேதாசு வதரவாக்கியத்தாலும் சிவபெருமான்ஒருவரே பிறப்பிறப்பில்லாப் பரமபதியென்று நிரூபிக்கப்படும்.

மனம். துர்வாசராகச் சிவன்பிறந்தார என்பதற்கு என்ன சொல்வீர்.

விவேகம். அதனுண்மையைச் சொல்லுகிறேன்கேளும்.

(ஏகந்தவாப்யசுகரம்தது தாஹராமோ
ஜாதேனபாவ்யமம்ராந்தரவத்வயாபி
அப்யர்த்திதோபிஹிமஹேசம்ஹர் ஷிதாரை
ரந்தர்ஹிதஸ்த்வமஸிகர்ஹிதகர்பவாஸ꞉)

என்னும் ஸ்ரீஹரதத்தாசாரிய சுவாமிகள் திருவாக்கால் சர்வேஸ்வரராகிய தேவரீருக்கும் ஒருகாரியந் துஷ்கரமாம் அது இதரதேவதைகளைப்போல ஜநித்தால் கர்ப்பத்திலிருந்து வெளிப்படும்படியாக வருமென்று அத்திரிமகாரிஷியினுடைய பத்தினியாகிய அநசூயையால் பிரார்த்திக்கப்பட்டவரா யிருந்தபோதிலும் கர்ப்பவாசம் நிந்திதமென்று அந்தர்ஹிதரானீர் என்பதாம் என்று வெளிப்பட்டவாற்றால் சிவன் துர்வாசராகவந்தது அநசூயாதேவியின் கர்ப்பசம்பந்தமல்லவென்பது ஸ்பஷ்டமாய் விளங்குகின்றது. இதனை வலியுறுத்துமாறு சனற்குமார சம்ஹிதையில்.

(புராத்ரேரபியத்பத்னியாவராதேவாபவத்ஸுத꞉
ஸ்வல்பாம்ஸேநாபிகர்பஸ்ய துர்வாஸத்வமுதாஹரந்
அஸௌதேவ꞉க்ரமாத்புத்ரகாரஞ்த்ஸநாதயாதயா
ஸபுஷ்பாஞ்ஜலிநாபூதோவிஸஸர்ஜாம்ஸகம்ஸ்வகம்
அந்தரஞ்சவிபுஷ்பேஷுப்ரவிஸ்யாந்த꞉பிநாகிநா
கர்பாவாஸௌஹி துர்வாஸாஸ்ஸர்வாவாஸேஷ்வதீவயத், துர்வாஸாநாம்புத்ரோபூத்தஸ்யா꞉புஷ்பாஞ்ஜலேஸ்ஸிஸு꞉, தஸ்மாத்பசுபதேரங்யத்யத்கிஞ்சிஜ்ஜகதிரிதம், ஸர்வேதேபசவ꞉ப்ரோக்தாவஸீபசுபதிஸ்ம்ருத꞉, மாயாபாஸேநபத்நாதி பசூநேதாம்ஸ்வலீலயா, தமேவமோசகம்ப்ராஹு꞉ பசூநாம்ப்ரஹ்மவாதிந꞉, மாயாபாஸேநபத்தாநாம்மோசகோந்யோநவித்யதே, தம்ருதேபரமாத்மாநம் பூதாதிபதிமீஸ்வரம்)

என்று பெறப்பட்ட வாக்கியங்களால் அத்திரிபகவான் சிவபெருமானைத் தனக்குப்புத்திரராக அவதரிக்கும்படி

வேண்டியும் அவருடையபத்தினியாகிய அநசூயையிட
த்தும் ஸ்வல்பாம் ஸமும் கர்ப்பப்பிரவேசமாதல் ஸித்தி
தமென்று சொல்லிக்கொண்டு புத்ரார்த்தமாக ஸ்நானஞ்
செய்த அநசூயையினுடைய புஷ்பாஞ்சலியில் பரமே
ஸ்வரன் தன்னுடைய அம்சத்தைப் பிரவேசிக்கச்செய்
தார். கர்ப்பத்தில்வசித்தல் சர்வவாசங்களிலும் துர்வாச
மென்று சொல்லிக்கொண்டு புஷ்பங்களோடு கூடிய
குவித்தகைகளினின்றும் சிசுவாக ஆவிர்ப்பவித்தகாரண
த்தாலேயே துர்வாசர் என்னும் நாமத்தோடு விளங்கி
ஞர். ஆகையால் பசுபதியைக்காட்டிலும் இதரமானசக
லபிராணிகளும் பசுக்களென்று சொல்லப்படுவர். அந்த
தப்பசுக்களைத் தனதுலீலையால் பரமேஸ்வரர்-மாயாபா
சத்தாற் கட்டவும் விடவும் ஸ்வதந்திரராகையால் ப்ரம்
ஹவாதிகள் அவரைப்பசுபதியென்றுபிரசித்திபாராட்டா
நின்றனர். பூதாதிபதியும் பரமாத்மாவுமாகிய சிவபெ
ருமானைக்காட்டிலும் மாயாபாசத்தால் கட்டுண்டுகிடக்
கும் பசுக்களை விடுவித்தற்குச் சக்தர் அந்யத்ராகிடையா
து என்று வெளிப்பட்டதால், பசுக்களைப்போல யோ
னிவாய்ப்பட்டுப் பிறக்கும் அவலட்சண மான்மியம் சிவ
பெருமானிடத்துக் கிடையவேகிடையாது.

மனம், இப்படிப்பட்ட சிவோத்கர்ஷங்களைக் கேட்கக்கேட்கப் பரமானந்தமாய் இருக்கின்றது. மேல் வல்லாளமகாரா ஜனுக்குச் சிவபெருமான் புத்திரராய்த்தோன்றி அருள் சுரந்ததை ஆதியோடந்தமாக உரைத்தருளக் கோருகி றேன்.

விவேகம். அப்படியே சொல்லுகிறேன் கேளும்.

மனம், மஹாபாக்கியம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# ஸ்ரீவல்லாளதேவர்

## சரித்திரக்கீர்த்தநம்.



### கணேசர்கீர்த்தநம்.

இராகம்-நாட்டை-தாளம்-ஆதி.

பல்லவி.

சிவசுதகணபதிநமோநமோ ஓம்
சித்திபுத்திகள்மகிழ்குஞ்சராஓம்

அநுபல்லவி.

பவநோய்தீர்த்தருள்தயாபரா ஓம்
பராபராஓம் சுபாகராஓம் (சிவ)

சரணம்.

வந்திதமூஷிக வாகனனேஓம்
வாரணசுபமுக விக்கனனேஓம்
சுந்தரவல்லபை மணாளனேஓம்
சுதாயகாஓம் விநாயகாஓம். (சிவ)

பச்சைமால்மகிழ் மருகர்வரனேஓம்
பாசவிமோசதி வாகரனேஓம்
சச்சிதானந்தஸ்ரீ யைங்கரனேஓம்
தற்பரனேஓம் சிற்பரனேஓம். (சிவ)

## சரஸ்வதிகீர்த்தநம்.

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

பல்லவி.

காத்தருள்புரி யித்தநியமணி
கருணாரசாமணி.

அநுபல்லவி.

ஏத்துஞ்சகஸ்ரதளப் பூத்தவிசொளிர்விதி
ஏருலாம்வதன மிலகுஞ்சரஸ்வதி. (காத்த)

சரணம்.

நிகிலபுவனகனகவிஜன மனுதினநினையுதாரி
நித்திலநிகருசுகாத்திரஜோதிகெம்பீரி
சுகிர்தமிகுவமுத வதிநயகுணகரி
சோபிதாற்புத புனிதவதிசதுரி. (காத்த)

திமிரபடலமறவருசுடரெனும்ப்ரக்யாதிநீதி
சேதனகோடிமனோகரசுகவனுபூதி
தமரமறைமுதலானகலாநிதி
சாற்றுஞானந்தவாரிகுணஜலதி. (காத்த)

பரிவினினதுதிருமலரடிகதியெனப்பாடிநாடிப்
பத்தியாய்ப்பரவுமெனுவினையினிதுடன்கூடி
அரியவல்லாளதுரைகதையோதிட
ஆசிலாதமொழிதந்தேமகிழ்ந்திட. (காத்த)

இராகம்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

இந்தச்சரித்திரமதைக்கேட்பீர்கேட்பின்
எல்லாப்பெருமையும்வாய்ப்பீர்.

அநுபல்லவி.

அந்தாதிகளில்லாப்பரஞ்சோதி-அருமறைமுடிமேனடிக்கும்
சந்த்ரசேகரனெனுஞ் சிவபெருமான்றன்
தனித்திருவிளையாடல்சாற்றும். (இந்தச்)

சரணம்.

அருணையம்பதியை யாண்டருள்புரியும்
அன்பன்வல்லாளபூபதியின்
பெருந்துயர் துமிக்கச்சிவபெருமானே
பிள்ளையாய்வந்ததைப்பேசும். (இந்தச்)

தந்தையுந்தாயு மில்லாச்சிவமே
தந்தையாயரசனைக்கொண்டு
அந்தத்திலன்றோற் றொருசுதன்செய்யும்
அருங்கடன்புரிந்ததைக்கூறும். (இந்தச்)

கல்வியோடறிவுந் தனத்துடன்கொடையுங்
கருதருஞ்சிவனடித்தொண்டுஞ்
சொல்லரும்புகழும் ஆயுளும்பொறையும்
சுதனுமற்றியாவுங் கொடுக்கும். (இந்தச்)

## கதாரம்பம்.

இராகம்-பரசு-தாளம்-ஆதி.

பல்லவி.

கயிலைமலைக்காட்சியே அடியவர்
கண்டுகளிப்பது கொண்டுசதா துதிக்கும் (கயி)

அநுபல்லவி.

குயிலுடனேசுகங் கூடியேபாடிட
மயிலெழிலாகவே மாநடமாடிட
வளமாரும்-புட்பச் சோலைசேரு-மா
வாவிபலகொண்டிலங்கும். (கயி)

ஓதருமேருவி னுச்சியினடுவே
ஜோதிசிகர மென்னும்பெயர்த்தாய்ச்
சோபையுற்றுச் - சொற்படிகமெொத்து-மேல்
சுத்தரசிதம்போலொளிர். (கயி)

சீதரனுதிய தேவர்கிங்கரரும்
மாதவமுனிவர் மனுக்கள்மற்றவரும்
வந்துகூடி-மறையனந்தம்பாடிப்-புகழ்
மாதுமையாள்பங்கனுறை: (கயி)

வசனம்.

உலகங்களுக்குநடுவே இலக்ஷம்யோசனை யுன்னதமும் முப்பத்திராயிரயோசனை விஸ்தீரணமுமுடைத்தாய்ப் பசும்பொன்னிறமாயிருக்கும் மஹாமேருவி னுச்சியினடுவே ஜோதிசிகரமென்னும் பெயரையுடைத்தாய், இருபதினாயிரம்யோசனை யுன்னதத்தையும் விஸ்தீரணத்தையும் உடைத்தாய். ஸ்படிகம்போலும், இரசிதம்போலும், நிர்மலமாயும், இனியகுரலினையுடைய குயில்களும், கிளிப்பிள்ளைகளும் மறைகளைப்பாடவும், மயில்களானவை நடனஞ்செய்யவும், வளம்பொருந்திய புட்பச்சோலைகள் சூழ்ந்த பல தடாகங்கள் நிறைந்துள்ளதாயும், பிரம்ம விஷ்ணு இந்திராதிதேவர்களும் சர்வரிஷிகணங்களும் சேவித்திருக்க, ஸ்ரீகண்டபரமேஸ்வரனானவர், சுத்தவித்யாமயமான மந்திர சிம்மாசனத்தின்மீது வீற்றிருக்கப்பெற்றதாயும் விளங்கும் ஸ்ரீமகாகைலாசமானது அதிககாட்சியோடும் கூடியதாகும்.

இராகம்-காபி-தாளம்-ஆதி-

பல்லவி.

எழிலரியாசனத்தேயிருந்தார்-புனைந்
தெய்வப்பெருமானந்திவீற்றிருந்தார்.

சரணம்.

செழும்பசுந்தங்கச்சுவர்வயிரக்கால்
செம்மணிக்கொடுங்கைபச்சையுத்திரம்மேல்
பழுதிலாச்சந்த்ர காந்தத்தகடு
பரந்தொளிர்கைலைமண்டபத்திலங்கும். (எழி)

நாரதராதி ரிஷிகள்கிந்நரர்
நாகர்கிம்புருடர் நல்லவித்யாதரர்
கிரமார்க்கண்டர் சித்தர்மற்றண்டர்
சித்தமுவந்துமிகச்சூழ்ந்திடவும். (எழி)

வசனம்.

அம்மஹாகயிலாசத்தில் தங்கச்சுவர் அமைத்து வயிரத்தூண்களை நிறுத்தி மாணிக்கக்கொடுங்கைசேர்த்து பவளத்தாற்போதிகையும் மரகதத்தாலுத்திரமுஞ்சேர்த்து மேலே சந்திரகாந்தத்தகடுபரப்பிய மண்டபமொன்றுண்டு. அதில்-அகஸ்தியர், நாரதர், வாமதேவர், மார்க்கண்டர், சனகர், சனற்குமாரர், பதஞ்சலி, முதலிய தபோதனர்களும், சித்தர், கிம்புருடர், வித்யாதரர், நாகர், தேவர்

முதலியவர்களும் புடைசூழ அதிககாட்சியோடேக்கூடிய சிம்மாச னத்தின்மீது *மலர்மாலைவிளங்கப் பரமசிவம்போல் வீற்றிருந்த னர் ஸ்ரீநந்திகேசுரர். அத்தருணத்தில் காலனைஜயித்து நிலைபெற் றவையதினையுடைய மார்க்கண்டேயமுனிவர் எழுந்து நந்திகேசுர ரைப்பணிந்து கேட்கின்றார்.

இராகம்-சரஸ்வதி-மனோஹரி-தாளம்-ஆதி.

பல்லவி.

முத்திகூட்டுமே துகாட்டுவாய்
நந்திதேவனே ஓதேவனே.

அநுபல்லவி.

சுத்தசைவசந் மார்க்கமாமணி
சுப்ரதீபமே என்றன்கண்மணி. (முத்தி)

சரணம்.

ஜனனமரணங்களின் றன்மையும்விவிதமார்
வினையின்விபாகமும் விளக்கினீரையனே
புனிதவேதாகமப் பூர்ணபாண்டித்யா
அனகசிலாதர னரியசுதாநித்யா. (முத்தி)

வசனம்.

அஞ்ஞானமாகிய விருளைப்போக்கும் சுப்ரதீபமே சுத்தசைவ சித்தாந்த சிகாமணியே, என்கண்மணிபோன்றவரே சுவாமி ஜனன மரணங்களின் றன்மையும், இவற்றிற்குக்காரணமாகிய பல்வேறு வகைப்பட்ட நல்வினை தீவினையின் தன்மையினையும் எங்களுக்கு அருளிச்செய்தீர். இனி மோக்ஷத்தை யடையும்படியான வழியை அநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, நந்திகேசுரர் மனம கிழ்ந்து சொல்லுகிறார்.

நொண்டிச்சிந்து

சிவம்மணமேகமழும் திருச்
செம்பவளச்சிறுவாயுடைய
தவமிகுமார்க்கண்டரே நனி
சாற்றற்கரியமுத்திப்பேற்றைத்தரும்
வழியோபலவுண்டு இந்த
வையமுய்யவேஅந்தமெய்யையுரைப்பேன்
சித்தங்களிகூர்ந்து மிகச்

செவிமடுப்பீர்வெகுபுகழுடுப்பீர்
கம்பாநதிகும்பாநதி புகழ்
காவேரிகோதாவரிகிருஷ்ணை
பம்பைநதிவேகவதி பகர்
பாலாறுகங்காநதிமுதலாம்
புனிதமிகுந்திர்த்தங் களில்
புந்தியுவந்துபோற்றிடப்படிந்தோர்
பாவப்பெருக்கெல்லாம் கதிர்ப்
பரிதிமுன்பனியெனப்பறந்தோடுமே
இதுவுமேயல்லாமல் மஹா
எழிலாருங்கோபுரக்காசிதனில்
எப்பழியோருமிறந் திட
எம்பெருமான்சிவரூபம்பெறுவர்
நாகந்தலைகுலுங்க மிக
நடித்தவர்களித்திடுந்திருநடஞ்செய்
திருவாரூர்த்தலமே யதில்
ஜென்மித்தயாவுமேமுத்திபெறும்
சிதம்பரக்ஷேத்திரத்தில் பல
சேதனுசேதனம்நடைபெறவே
அருளாலேபுரியும் ஸித்தி
யானந்தத்தாண்டவங்கண்டவரோ
காணார்கருக்குழியே நீல
கண்டனடியில்மகிழ்கொண்டிருப்பர்
விருத்தாசலம்துறை ஸ்ரீ
வேணுபுரமிராமேச்சுரம்
மற்றும்பலபதியில் சென்று
வணங்கியெம்பெருமான்சிவன்பதமே
வாழ்த்துவோரேமுத்தர்.

வசனம்.

எப்போதும் சிவமணமே வீசப்பெற்ற திருவாயினையுடைய மார்க்கண்டேயரே கேட்கக்கடவீர். கம்பநதி, கும்பநதி, காவேரி, கோதாவரி, கிருஷ்ணவேணி, பம்பைநதி, வேகவதி, பாலாறு, கங்கை, முதலாகிய புனிதநதிகளெல்லாம் தம்மிடத்தில் ஸ்நாநம் செய்தவர்களுடைய பாபத்தைப்போக்கும், அல்லாமலும் காசியென்னும் க்ஷேத்திரம் மஹாபிரசித்தியுடையது அதில் இறந்தவர்யாவரேனும் சிவசாருப்பியத்தை யடைவர். திருவாரூரிற் பிறந்தவர்

யாவரேனும் முத்தியடைவர். சிதம்பரத்தில் சிவபெருமானுடைய ஆனந்தத்தாண்டவத்தை தரிசித்தவர்கள் முனிதராவார்கள். சீர்காழி, மதுரை, விருத்தாசலம், இராமேச்சுரம் முதலாகிய தலங்களிற்சென்று பிறந்தாலும் இறநதாலும் தரிசித்தாலும் சிவபெருமான் திருவுள்ளங்களிக்கும்படி பரிசுத்தம் பொருந்திய நீரினால் அபிஷேகஞ்செய்தாலும் சிவாலயங்கட்டுவித்தாலும் மேலானபரகதியுண்டாமென்று நந்தியெம்பெருமான் அருளிச்செய்ய அதைக் கேட்ட மார்க்கண்டேயர் அவரைவணங்கி மேலுங்கேட்கின்றார்.

இராகம்-அமீர்கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

அருள்வாய் அருள்வாய் தயையுடனே
அதிவிதரண பிரபலநிபுண நந்திதேவா.

அநுபல்லவி.

அருளியநதிக்ஷேத் திரங்களுக்கோடி
அமாரும்வழிபட ஏங்குவர்வாடி
உரித்தோமனிதர்க்கு மெளிதினிற்றேடி
உய்யவோர்க்ஷேத்திரம் யாருமேநாடி. (அருள்)

சரணம்.

அற்புதநீடு விநோததணீரிலெழுந்த புற்புதமொத்த
ஆக்கையராகியமானிடர்கால்கை விழுந்த போதுநேத்திரம்
அற்றுவருத்தமுறும்பொழுதும்மொழிந்த நதித்தலம்
ஆவலாயோடியே யாடிநினைந்தேயழுந்த வந்தனைபுரிந்
தற்பொடுகண்டு களித்திடலேது
அத்தகையால்முத்தி யார்க்குங்கிட்டாது
அற்பருமெளிதினி லுய்யவேயோது
மருந்தலமொன்றருள் வாய்வெகுசாது(அருள்)

வசனம்.

இன்ன தன்மையையுடைய நதிகளுக்கும் ஸ்தலங்களுக்கும் போய்த் தீர்த்தமாடி வழிபாடுமுதலானவைகள் செய்வதற்கு தேவர்களாலும் முடியாது. அற்பவாழ்நாளையுடைய மனிதர்களுக்கு முடியுமோ. தீர்த்தம், ஸ்தலம், இவைகளுக்குப்போதல், பிரதட்சணம்செய்தல், கும்பிடுதல், தரிசனஞ்செய்தல் முதலியவற்றிற்கு ஏதுவாகிய கை கால் கண்கள் அற்றவர்களுக்கும், விவேகசூனியர்களுக்கும், நீசர்களுக்கும், அதிகபாவத்தழும்பர்களுக்கும், மிருகங்களுக்கும், மற்றுமுள்ள ஜீவராசிகளுக்கும், எளிதில் முத்திதரத்தக்க ஒருஸ்தலம் அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கு நந்திதேவர் அப்படி மோட்சங்கொடுக்கிறஸ்தலம் ஒன்றுண்டு அதைச்சொல்லுகிறேம், என்று அருணசலமென்னும் ஸ்தலத்தை நினைந்து பரவசமானார்.

இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

தலமொன்றேயுண்டத்தலம்
சர்வவுயிருக்கருளும். (தல)

அநுபல்லவி

கலையோடலையுமேவிக் கதித்திடுஞ்சடிலன்
இலகருணாசல மென்றெவரும்புகழும். (தல)

சரணம்.

கண்ணிலாதோர்க்குங் கைகால்களற்றவர்க்கும்
எண்ணுங்கணத்திலசித்தி யெளிதிற்றரும்மருணைத். (தல)

தூரத்திருப்போரும் தொலையாப்பிணியோரும்
நேரில்பாதகரும் நினைக்கவருளருணைத். (தல)

மாதவனயன்றன் மயக்கமறுத்தருள்
சோதிமலையிலிங்கஞ் சொலிக்குமுயரருணைத். (தல)

வசனம்.

குருடர், முடவர், அதிதூரத்திலிருப்போர், நீங்காப்பிணியாளர், ஒப்பற்றமகாபாதகர் முதலானவர்களுக்கும், நினைத்தவுடன் முத்தியளிப்பதும் பிர்மவிஷ்ணுக்களுக்கும் அருள்புரியும்வண்ணம் பரமசிவமே ஓர்ஜோதிமலையாய்ப் பொலியப்பெற்றதுமான ஓர் க்ஷேத்ரமுண்டு அதன்பெயர் அருணாசலமாகும். என்றுகூறி, இன்னும் அத்தலமகிமையும் ஜோதிமலையானது முதலானபிரபாவத்தையுஞ்சொல்லி உலகின்கண் அதிகசிறப்புற்றோங்கும் முக்குலவேந்தருள் அக்கினிகுலோத்துங்கனென்று வழங்குஞ் சேரகுலாதிபனான வல்லாளமஹாராஜனுக்குப் பிள்ளைகலிநீக்கி முத்தியளித்த மகிமையைக் கூறத்தொடங்கி அவ்வருணையம்பதியில் அவ்வரசவள்ளல் நடாத்திய செங்கோற்சிறப்பை நந்தியெம்பெருமான் மார்க்கண்டேயர் முதலானவர்களுக்குச் சொல்லுகிறார்.

இராகம்-பிலஹரி-ஆதிதாளம்.

பல்லவி.

வல்லாளன் செங்கோல் மகாற்புதமே
வாழுங்கொண் டாடு மதைநிதமே.

அநுபல்லவி.

சொல்லரு நான்மறை யோருருவாய்த்
தோன்றின ஐயனு நீதிபுரி. (வல்)

சரணம்.

நாற்படை யாழி நலந்திகழ
நாடியேமன்னர்கள் தாம்புகழ
நஞ்சந்தங் கும்வஞ்சம்
மிஞ்சுங்கன் னெஞ்சர் அஞ்சிய. (வல்)

ஆறினிலொன்றே கொண்டுயிரை
ஆதரிப்போனிகல் ஜெந்துக்களும்
அத்யந்தம் நட்புட்கொண்
டொன்றுக்கொன் றுென்றச்செய்திடு. (வல்)

வசனம்.

சதுரங்கசேனுசமுத்திரம் பொலியவும் சிற்றரசர்களெல்லாம் துதிக்கவும், கொடியபகைவர்கள்நடுங்கவும், பகைக்கும் இயல்பினையுடைய ஜந்துக்களும் சினேகம்பாராட்டிக் கூடிக்குலாவவும் மநுநீதிதவருது ஆறிலொருகடமைகொண்டு குடிகளை ஆதரித்து தேவர்களுங் கொண்டாடும்படி அவ்வல்லாளமகாராஜன் அரசுபுரிந்துவருகையில் சகலசம்பத்தும் இருந்தும் புத்திரனில்லையேயென்று பரமசிவத்தைநினைந்து துயருறுகின்றார்.

இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

பாவியென்றென்னைப் பாருமே
பழிக்குமே ஈசா சிவமே.

அநுபல்லவி.

கூவியுன்னைக் கும்பிட்டெழுந்தும்
குறைதீர்த்தாயிலை குலதேவேகொடும். (பாவி)

சரணம்.

வேதவிதிக் கேற்கஇரண்டு
மின்னிடைமாதரைக் கொண்டு
மோதுஞ்செகத்தை யாளத்தகுந்த
ஒருசுதனின மேனுெகான் பெற்றிலேன். (பாவி)

கொஞ்சிப்பேசுங் குதலைமக்கள்
குலவாவீட்டி லோர்வக்காவும்
மிஞ்சிப்பறவா வென்றேயுலகம்
மிகநிந்தித்துப் பேசிடுமேசாமி. (பாவி)

எடுத்தணைத்து மோந்துமுத்தமு
மிடவுங்குதலைச் சொல்லைநித்தமு

மடுக்கக்காது மனமுங்களிக்க
மகவிலேனினி யேதுநான்செய்குவேன். (பாவி)

ஒருவர்க்கொருவர் கண்டபோது
உண்டோகுழந்தை யென்றலாது
பொருளைக்கேளார் பெயர்தனைச்சொல்ல
புகழ்சுதனருள் வாயோஎன்சாமி. (பாவி)

புத்தென்னும் நரகந்தன்னிற்
புகவிடாமையின் புத்ரப்பேரதாம்
புத்தமுதே புனிதனுகையான்
புத்திரப்பேறருள் வாயோ என்சாமி. (பாவி)

வசனம்.

வேதவிதியின்படி இரண்டுமனைவியரைக் கொண்டும் ஒருபுத்திரனும் உதிக்கவில்லையே, மக்களில்லாதவீட்டில் வக்காவும்பறவாதென்று உலகம்ஏசுமே, கையாரவெடுத்து மார்போடணைத்துக்குதலைச்சொற்களைக் காதாரக்கேட்டு மனமார மகிழும்படியான புத்திரபாக்கியம் இல்லையே, ஒருவர்கொருவர்கண்டபோது குழந்தைகளெத்தனை என்கிறார்களேயொழிய பொருளுண்டோவென்று கேட்பதில்லையே, புத்தென்னும்நரகத்துக்கோ என்னை ஆளாகவிதித்தாய், பரமசிவா, உமதுதிருவடிகளையே பணிந்து கூவியலறியும் புத்திரனில்லாக்குறையை இன்னம் தீர்க்கவில்லையே, ஐயோ கொடும்பாவியென்று என்னை உலகம்பழிக்குமே என்செய்வேன் பரமசிவா, என்குலதெய்வமே என்றிவ்வாறு வருந்தியபின்னர் வல்லாளமஹாராஜன் மந்திரிமார்களோடு யோசிக்கின்றனர்.

இராகம்–ஆரபி–ஆதிதாளம்.

பல்லவி.

யோசித்துத் தான்சொல்வீர் குணமிகு
பூகவிவேகசு மந்திரிமாரே.

அநுபல்லவி.

பூசனிடும்பை நீக்கும்விதத்தைப்
புத்திரப்பேறினி யடையுமார்க்கத்தை. (யோசி)

சரணம்.

வேதமோடாகம நெறியிற்பிறழ்ந்தோ
விரிந்தசாத்திரங்களின் வரம்பிற்கடந்தோ
போதவந்தனருக் கேதம்விளைந்தோ
புத்திரனிலையார் சாபமுளைந்தோ. (யோசி)

ஆலயப்பணியிற் குறைகள்செய்தேனோ
அர்ச்சனைமலரிற் றவறிழைத்தேனோ
கோலமாதவர்களுக் கிடர்புரிந்தேனோ
கொலையாதிபாவக் கொடுமைகள்செய்தேனோ.(யோசி)
பசித்தோர்முகம்பார்த் திரக்கங்கொண்டிலனோ
பரமசிவனடி யுரைவணங்கிலனோ
உசிதமனுமுறையை யனுசரித்திலனோ
ஓதும்பாதகமெலாம் உறையுமோரிலனோ.(யோசி)

வசனம்.

ஜகதீசனாகிய ஸ்ரீஅருணாசலேஸ்வரருடைய ஆலயப்பணிகளில் ஏதேனும் குறைகள்செய்தேனோ, பேதையேன்செய்யும் பூசையிற் குறையுண்டோ, அரசாட்சியில் மாறுபாடான குற்றங்களுண்டோ, யாரிட்டசாபமோ, ஒன்றுந்தெரியவில்லையே. ஓமந்திரிமார்களே, யான்கொண்டதுன்பம் நீங்கும்படி புத்திரப்பேறுண்டாகத்தக்க மார்க்கத்தை யோசித்துச்சொல்லுவீர்கள் என்று வல்லாளமஹாராஜன் கூற மந்திரிமார்கள் அரசனைநோக்கிச் சொல்லுகிறார்கள்.

இராகம்-ஸஹானா-தாளம்-ஆதி.

ராஜராஜேஸ்வரவாகா அதி ரமணியவசிகரதேகா
வாசவனொத்தவிவேகா புகழ் வல்லாளபூபதியேகா
மாசிலாதொளிருங்கனகாம் புஜ மலரடிபோற்றித்யாகா
தேசமருஞ்சிவயோகா இனி செப்புதுங்கேளும்வைபோகா.

இராகம்-தந்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

தருமஞ்செய்வதே தன்னைக்காக்கும் புத்ர
சம்பத்தையு மிகவுண்டாக்கும்.

அநுபல்லவி.

திருமலர்த்தடஞ்சூழுந் திருவருணையையாளும்
செல்வப்பிரபலவல் லாளபேரழகாளா
தரமிகுமக்கினிகுலந் தழைக்கவருஞ்சீராளா
சரசசல்லாப குணாளா மஹாதயாளா. (தரும)

சரணம்.

வேதபடிதமாம்க்ஷேத்ர-மென்று
விளங்குநம்மருணையைச் சுதோத்ரம்
நீதமுடனேசெய்து நாடிவந்துற்றபேர்கள்
நியமத்துடன்வேதத்தை யறிந்தமஹாசீலர்கள்
ஆதுலர்அடுத்தோர்கள் விரும்புமவையளித்தால்
ஆகுஞ்சர்வசித்தியும் அவரனுக்கிரகத்தால். (தரும)

வசனம்.

ஓ ராஜராஜேஸ்வரா நின்பதும பாதங்களுக்கு நமஸ்காரம் நம்பதியை நாடிவரும் ஆதுலர்களுக்கும் மற்றவர்களுக்கும் கேட்டதை அவர்கள் மனமகிழும்படி உள்ளன்போடும் நல்குவோமாயின் அவர்கள் அநுக்கிரகத்தால் நமது எண்ணம் நிறைவேறும் என்று மந்திரிமார்கள் சொல்ல, அரசவள்ளல் மந்திரிகளை நோக்கிச்சொல்லுகின்றார்.

இராகம்-அடாணா-ஆதிதாளம்.

விந்தகமேவு சுமந்திரி நின்வி
வேகத்தைக் கண்டேனே-ஆனந்தப்ர
வாகத்தைக்கொண்டேனே.
சித்தங்களித்தே அறத் துவசத்தை நாட்டுவாய்
ஜெகமுழுதும் விளிக்க ஆதுலர்கள்
அகமுழுதுங் களிக்க.

வசனம்.

ஓ மந்திரீ உன்விவேகத்திற்காக அதிக சந்தோஷமடைந்தோம் நமது பதியை நாடிவரும் மாந்தர்களைக் கலியென்னும் பிணியணுகவொட்டாமல் தரத்தும்படி ஜெகமுழுதும் அறிய ஆகாயபரியந்தமளாவ அறத்துவசத்தை நாட்டுவாய் என்று அரசன்கூற மந்திரி அரசனைநோக்கிச் சொல்லுகிறார்.

டோரா.

ராஜராஜேந்திர சொர்னக்ரீடாதிப
ரஞ்சிதனேசெய்வோம்-தயாளகுண
மிஞ்சிதனே யுய்வோம்.
ஆசைக்குகந்தபடி அளிக்கவல்லரோநாம்
அற்புதனே கஷ்டம் அருள்செய்வீரே
பொற்பதநின்னிஷ்டம்.

வசனம்.

ராஜராஜேந்திரா சொர்ன க்ரீடாதிபா அப்படியே செய்கிறோம் அவரவர் மனோபீஷ்டப்படி செய்யமுடியுமோ கிருபைபுரிவீர் என்று மந்திரிசொல்ல அரசன் மந்திரிமார்களை நோக்கிச்சொல்லுகின்றார்.

விருத்தம்.

அலகிலாக்கலையின்வல்ல வமைச்சரே கேளுமிந்த
உலகினில் லனயார்கேட்போர் உதவுவோரெவரோகேட்கின்
மலைவிலா துடனேசொன்ன வண்ணமே துவசநாட்டி
இலகுமெம் நாடுங்கேட்டான் எழின்முர சாற்றுவீரே.

வசனம்.

சர்வசாஸ்திர நுட்பத்தை யறிந்த அதிசாமர்த்தியம் பொருந்தியமந்திரிமார்களே உலகிலில்லாத பொருளைக் கேட்கப்போமோ அப்படியாவரோனுங் கேட்டபோதினும் எத்தன்மையராயினுங் கொடுக்கக்கூடுமோ முடியாது ஆகையால் யான் உங்களுக்குரைத்தவண்ணம் அறத்துவசத்தை நாட்டி எவ்வுலகத்திலும் பேரொலிமுழக்கம் எட்டும்படி ஜெய முரசறைவிப்பீர்கள் என்று வல்லாள மஹாராஜன் சொல்ல.

மந்திரிகள் வசனம்.

தங்கள் திருவாக்கின்படியே செய்கிறோம் சுவாமி என்று மந்திரிகள் கூறி அறத்துவசத்தை நாட்டுகின்றனர்.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

தர்மத்வசந் தாபித்தார்
தாலம்புகழவே சதா.

அநுபல்லவி.

தரமாருமா வண்டமளாவியே
சசிபதிமுதல்-சுரர்முனிவரர்-அதிகளிகொள-மிகவுமுயர (த)

சரணம்.

ஆரணம்பூ சுரரோதிட
அரிவையர்பா டிடவாடிட
பேரிகைபூரிமு ழங்கிட
பேசுசுபாகர மோங்கிட
பாரினில்யாரு மறிந்திட
பாணர்தபோதனர் போற்றிட
ஏருறுஜங்கம ராதுலர்
ஈசனோர் நல்லன்பர்வாழ்த்திட (தர்ம)

வசனம்.

அந்தணர்கள் வேதபாராயணஞ் செய்யவும், அதி சுந்தர முள்ளமாதர்கள் பாடவும் ஆடவும், பேரிகை பூரிமுதலான மங்களவாத்தியங்கள் இசைக்கவும், பாவலர்கள் போற்றவும், சிவனடியார்கள் வாழ்த்தவும், தேவர்கள் முனிவர்கள் அதிசயித்துக் களிக்க வானமளாவியுயரவும், உலகமெல்லாம் எப்போதும் புகழவும், தர்மத்துவசத்தை நாட்டினார்கள் மந்திரிமார்கள்.

இதைக்கேள்வியுற்ற வையகத்திலிருக்கும் அந்தணர் விருத்தர் பாவலர் ஜங்கமர் யாசகர் முதலியயாவரும் பக்தியுடன் கூட்டங் கூட்டமாய்க் கூடிவந்து தத்தம்வறுமை நீங்கும்படி அரசனை நோக்கி வேண்டுகின்றார்கள்.

இராகம்-சாமா-ரூபகதாளம்.

ஆசீர்வதித்துப நயனம்நடத்துதற்
கரசேபொன்தாவென்பர் மறையோர்
மாசில்மந்த்ரீயிவர்க் கிருநூறுபொன்னுத்தான்
வழங்கிடுவாயென்பன் கோமான். (க)

பாதிபிராயங் கழிந்துமணமிலே
பணந்தருவாயென்பர் சிலபேர்
கோதில்மந்த்ரீ-யிவர்க்கைந்நூறு பொன்னுத்தான்
கொடுத்திடுவாயென்பன் கோமான். (உ)

சிவாலயங்கில மாய்விட்டதண்ணலே
திருத்தப்பொன்தாவென்பர் பெரியோர்
அவாவொடுமந்த்ரீ யவர்க்கைம்பதாயிரம்
அளித்திடுவாயென்பன் கோமான் (ங)

பசிப்பிணிவந்தெம்மை நசிக்குதெம்மண்ணலே
பார்த்தருள்வாயென்பர் சிலபேர்
கசிந்துளமேமந்த்ரீ யுபசரித்தன்னோரைக்
காத்திடுவாய் என்பன் கோமான். (ச)

மாடுமனைவீடு கொதுவையில்மூழ்கவே
மாழ்கிவந்தோமென்பர் சிலபேர்
நாடிமந்த்ரீயவர்க் கேற்றபொருள்தனை
நல்கிடுவாயென்பன் கோமான். (ரு)

வசனம்.

இவ்விதமாய்க்கேட்க அரசன் அவரவர்கள் விரும்பிய வண்ணம் மனக்களிப்புடன் கற்பகத் தருவைப்போலும் உதவிபுரிந்து வர இதனை நாரதமாமுனிவர் கேள்விப்பட்டு மஹாராஜனிடத்திற்குக் கருணையோடும் எழுந்தருளினர். இந்தபோதனர் வரவைக் காவலாளிகளால் அரசன் அறிந்து எதிர்சென்று வணங்கினன்.

இராகம்-கல்யாணி-அடதாளம்.

பல்லவி.

நாரதமாமுனியே நளினபாதஞ்சரணம்

அநுபல்லவி.

பூரணவிங்கெழுந்தருளப் புண்யமென்ன செய்தனனோ. (நா)

சரணம்.

உன்திருமுகங்கண்டே னுற்றகவலைவிண்டே
னென்னையனேயிப்பேடத்-தெழுந்தருள்மகிழ்கொண்டே (நா)
போற்றிமாதவாபோற்றி-புண்ணியா போற்றிபோற்றி
சாற்றநின்வரவினேது தயைபுரிந்தாள்வாய்போற்றி. (நா)

வசனம்.

நாரதமஹாமுனிவரே சரணம் சரணம், அடியேன்மீது கிருபாகடாட்சம் வைத்து இங்கெழுந்தருள என்ன புண்ணியஞ் செய்தேனோ உமது திருமுகத்தைக் கண்டவுடன் கவலை தீர்ந்தவனானேன், இப்பொற்பீடத்தில் எழுந்தருள்வீர், தயைபுரிந்து தேவரீர் தவரவின் காரணத்தைத்தெரிவித்து இச்சிறியேனை ஆண்டருள்வீர் என்று வல்லாளபூபதி துதிசெய்து நிற்க, நாரதமஹாமுனிவர் அரசனைநோக்கிச் சொல்லுகின்றார்,

லாவணி.

நாரதர். போற்றும்வல்லாள-பூபநின்தர்மம்
புவியிற்பரந்ததனால்-அதை
யாற்றுதற்கேது-அறிந்திடவேண்டி
யன்பனே-வந்தேன்சொலாய்

வசனம்.

போற்றிநிற்கின்ற வல்லாளபூபனே நின்தர்மப்பிரபாவம் எங்கும் பிரசித்தியாயிருப்பதினால் அவ்விததர்மம் செய்வதற்கு காரணமென்ன வென்பதை அறியவேண்டிவந்தேன் சொல்லுவாய் அன்பனே என்று முனிவர் கேட்க.

அரசன். ஐயனேயென்பேர்-சொல்லவுமரசை
யாளவும்புத்ரனில்லை ஈசன்
மெய்யடியார்கள்-வேட்டனதரவே
விருப்பமுற்றேன்சாமி.

வசனம்.

சுவாமி என்பெயரைச் சொல்லவும் என்னரசைத்தாங்கவும் புத்திரனில்லை யாதலால் சிவனடியார் முதலானவர்கள் விரும்பியவற்றைக் கொடுக்க நியமம் பூண்டேன் என்று அரசன் சொல்ல.

நாரதர். அறம்புரிவோர்கள்-பெறுவர்புத்திரரென்
றாகமந்தேர்ந்துரைக்கும் நாலெட்
டறப்பெருஞ்செல்வி-பங்கனருள்வான்
அஞ்சல்விடைதருவாய்.

வசனம்.

தருமத்தைப்புரிபவர்கள் புத்திரப்பேறடைவார்கள் என்று ஆகமம் முறையிடும் உமாநாதன் அருளால் புத்திரப்பேறுண்டாகும் எனக்கு விடைதருவாய் என்று முனிவர்கூற,

அரசன். சந்திரமௌலி-சங்கரன்போன்ற
சற்குருவானவரே நின்
வந்திதபாத-சேவையினாலே
மாசுதீர்ந்தே-னாயினேன்.

வசனம்.

சந்திர சேகரனாகிய சங்கரன்போன்ற எனது சற்குருவே உமது பாதசேவையினாலே குற்றமெல்லாந் தீர்ந்தவனானேன் சுவாமி என்று வணங்கினான் வல்லாளமஹாராஜன்.

விருத்தம்.

சீராரும்ருணைநகர்க் கிறைவனைநாரதமுனிவன்தேற்றிப் பின்னர், பேராருங்கைலையடைந் தெம்பெருமான்நந்திபதம் பேணிப்போற்றித், தாராருங்குழலுமையா ளிடத்திலங்கப் பொலிவெய்துஞ் சங்கரன்றன், ஏராருமலர்ப்பதத்தை வாழ்த்தினனரசனிசையிசைக்கத்தானே.

வசனம்.

வணங்கிய அரசர் பெருமானைத் தைரியவார்த்தைகளால் தேற்றி இவனது சன்மார்க்கத்தையும் தருமபரிபாலனத்தையும் பார்வதிசமேதராகிய ஸ்ரீசிவபெருமானுக்குத் தெரிவிக்க எண்ணங்கொண்டு கைலையையடைந்து நந்தியெம்பெருமானை வணங்கி விடைபெற்றுச் சிவபெருமான் திருக்கோலத்தைக்கண்டு தோத்திரஞ் செய்கின்றார்.

இராகம்-கல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஆடியபாதாவிநோ தா
அடியனுக்கருள்ப்ரபோதா

அநுபல்லவி.

நீடுந்தயாபர அம்மைமகிழ்ந்திட
நேரின்மகாதிருத் தில்லையிலேநடம் (ஆடி)

சரணம்

மேகநிறத்தன்கை மத்தளங்கதிக்க
விரிசுடர்ப்பிரம தாளம்ஒலிக்க
நாகம்புலிமுனி நண்ணிக்குதிக்க
நாடிமூவாயிரம் பேருந்துதிக்க
தேவர்களும் பரிவாக
ஜெகத்தின்ரும் பொற்பாகப்

பாவலருஞ் சீராகப்
பக்திசெய்யப் பரிந்து
பட்சங்கொண்டு வந்து. (ஆடி)

வேதமுடிதன்னி லோங்கிடும்நீதா
விரிசுடர்மேவுந் தோடுடைக்காதா
வேதனுக்கும்விண்டு வுக்கும்நீதா
விளங்குஞ்சதானந்த பூரணநாதா

காதலுட னினையோத
கருத்துமதி யுந்தாதா
சேதனர்கள் சீராக
செம்பொன் மாடநிறைந்த
தில்லை மன்று ளென்றும். (ஆடி)

சீதமதிவெள்ளச் செஞ்சடைதாருட
திருமிகும்பூதி மாமுகமாட
ஓதற்கரியகுண் டலங்களாட
ஒளிக்குஞ்சிரமா லையாதிகளாட

ஜோதிம்மூ மாருட
துலங்கும்புலித் தோலாட
பாதகமெலா மோட
பச்சையப் பனும்பாட
பக்தி சித்தி தந்து. (ஆடி)

வசனம்.

என்று இவ்வாறுதுதித்து நிற்க சிவபெருமான் நாரதனைப்பார்த்துச் சொல்லுகின்றார்

விருத்தம்.

திருந்தவே புவனமெங்குந் தினமுங்கண்டறியவல்ல
அருந்தவநாரதாநின் னன்பினுக் குவகைபூத்தோம்
பரிந்துநீயிங்குவந்த பாங்கெவன் பாரின்மீது
பொருந்ததி சயந்தானுண்டோ புகலுவாயுவந்துதானே.

வசனம்.

புவனமுழுதும் நடக்கும் நித்யாதிசயத்தை யறியவல்ல நாரத முனியே உன்னுடைய அன்பினுக்கு மிகவும் மகிழ்ச்சியடைந்தோம் விரைவாக நீயிங்குவந்த காரணம்யாது உலகில் அதிசயமியாது சொல்லுவாய் என, நாரதமஹாமுனிவர் சிவபெருமானை நோக்கிச் சொல்லுகின்றார்.

விருத்தம்.

திருவளர் கைலைநாதா சிற்பரா நின்றாள்போற்றி
அருணையாள் வல்லாளன்று னருமகப்பேறுவேண்டித்
தருமநற்றுவசநாட்டித் தருவெனத்தருஞ்சீர்சொல்லப்
பரிவுடனெய்தினேன்யான் பரமனே போற்றிபோற்றி

இராகம்-புன்னாகவராளி-தாளம்-ரூபகம்.

கண்ணி.

பொற்பமரும்பூலோ கத்திற்
புகழும்வல்லாளபூபன் மிக
வற்புருவாயற-மேபுரிந்தானந்த
வற்புதமென்னசொல்வேன்

பார்புகழும்மருணா-சலமெனும்
பதியினையாண்டருள்வோன்-அருஞ்
சீர்மிகுமக்னி-குலத்தினிலேவரு
சேரபரம்பரையான்

பரம்பரைசெய்தவத்தின்-அரும்
பயனாய்ப்பொலிபவனும்-அறம்
பொருட்சுகமே-திரண்டோருருவான
பொற்புறுவடிவாளன்.

கொண்டலெனுங் கொடையான்-இகலிய
கொற்றர்களுக்கிடையான் மஹா
சண்டப்படையொடு திறலுடையான்திகழ்
சைவப்பொலிவுடையான்.

உடையவனுமெல்லாம்-ஆனால்
ஒருபுத்திரனில்லா ஏக்கமே
யுடையவனாய்மகப்-பேறடைவான்றுச
முயர்த்தி-மகிழ்ந்தனனே.

உயர்த்தியேயாவர்க்கும் உளம்
உவந்திலையென்னாமல் வழங்கிடும்
நயத்தினைச்சொற்றிட-வரிதரிதேயருள்
நல்குவாய் நாயக னே.

வசனம்.

பிரகாசம் பொருந்திய கயிலாசகிரியில் எழுந்தருளியிருக்கும் நாதனே உமது உபயசரணங்கள் போற்றி பூலோகத்தில் அருணைய

ம்பதியை யாள்பவனும் முக்குலவேந்தருள் அக்கினி குலோத்துங்க னென்று வழங்குஞ் சேரகுலாதிபனுமாகிய வல்லாளபூபன் சர்வைஸ்வரிய சம்பன்னனாயிருந்தும் தன்பெயரை விளக்கஞ்செய்வதற்கு ஓர் புத்திரனில்லாமல் ஏங்கி அதனைப்பெறுமாறுயாவர் எப்பொருளை விரும்பிக் கேட்டபோதிலும் அன்னவர் மனோபீஷ்டப்படி தருவே னென்று தருமக்கொடி நாட்டிப்பறைசாற்றி அறம்பொருளின்பமே ஒருருவாய் வந்ததென விளங்கிப் புரியுந்தருமத்தின் அற்புதத்தை என்னென்றுசொல்வேன் அன்றியும் தேவரீரது சரணகமலங்களில் இருதயத்தைப்பொருந்தி சதாகாலமும்பணிந்து துதிசெய்து வாழ்ந்துவரும் மெய்த்தொழும்பனுகும் என்று பாவிக் கூறினர் நாரதமஹாமுனிவர்.

விருத்தம்.

பாதவமுனிவன் சொற்றவாய்மையை யீசனோர்ந்து
நீதவல்லாளன்றன்மை நேரினிற்காண்போம் யாமென்
றோதிநாரதன்றனக்கங் குவகைகநல் விடைதந்தின்பம்
போதநீடியகுபேரன் வருகவிப் போதேயென்றார்.

வசனம்.

பரமசிவம் அங்ஙனமாக வல்லாள மஹாராஜன் பிரதாபத்தை நாரதமுனிவரால் கேள்விப்பட்டோமும் அவ்வரசன் தன்மையையாமே சென்று கண்டறிவோமென்று சொல்லி நாரதமுனிக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு இன்பமிகுந்த குபேரனை இப்போதே வரவேண்டுமென்று அழைத்தருளினர்.

இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

நீ பரிவாய் வாராய்-இக்ஷணமே

அநுபல்லவி.

மாப்ரதாபகு ணோத்ரா தனதிபா (நீபரி)

சரணம்.

சீருலாவிய செல்வங்கள்யாவுமே
சேரளகாபுரி யாளுங்குபேரா (நீபரி)

வானமளாவுமாட கூடகோபுரங்களும்
மருவுமெழிலருணை வேந்தன்செய்யும்
தானதிகளின் உறுதிகாண
தாமதேமேபுரி யாமலெம்மோடு. (நீபரி)

கண்டுவல்லாளன்றன் நெஞ்சமோர்ந்திட
கனகக்குவியல்கொண்டு கனிவினோடும்
தொண்டர்க்கினியவா னந்தம்பொருந்திட
சோபிதசீடசொ ரூபமாகவே. (நீபரி)

வசனம்.

அளகாபுரிக்கிறைவனே அருணையம்பதியில்வாழும் வல்லாள மஹாராஜன் மனவுறுதியைச் சோதிக்கும்படி எண்ணங்கொண்டிருக்கின்றமையால் நீயும் சிறந்த சேடனாகி அளவிறந்த பொற்குவியலோடு எம்முடன் வருவாய் என்று கட்டளையிடுதலும் குபேரன் சிவபெருமானை வணங்கிக் கூறுகின்றான்.

டோம்ரி.

பல்லவி.

இதோவந்தேன்புனிதா கைலைவினோதா
ஏறூர்சிவசிவ சிவமேபோற்றி

அநுபல்லவி.

இதாகரஹரா-எந்தையேயான் (இதோ)

சரணம்.

மணிநூபுரச்சத்தம் கலகலகலகல
கலவென்னத்தானட
மாடுஞ்சீர்மிகும் மலர்ப்பதத்தோனே. (இதோ)
திருமாலயனிந்த்ரன் சிவசிவசிவசிவ
சிவசம்புவே யெனத்
தேடுந்தேன்மலி-மலர்ப்பதத்தேவே (இதோ)
தினம்மெய்யன்பர்கள் துதிபுரிகுருபா
சிவசத்திந்தாய்மகிழ்
தேவேநான்மறை முடியொளிர்கோவே. (இதோ)

வசனம்.

சுவாமி இதோ வந்தேனென்று சிறந்த சேடவேடங்கொண்டு துதித்து நின்றான்.

இராகம்-இங்கிலீஷ்மெட்டு-ஏகதாளம்.

அங்கும்-இங்கும்-எங்கும்-நிறையொளி
பொங்குந்-திங்கள்-கங்கையு-மேபொலி
ஆசிலாத-சடைப்பெருமான்
அடியரைக்-காக்குஞ்-சிவபெருமான்
அட்டிச்-சற்றும்-இன்றிச்-சுரர்களும்
புட்பங்-கொட்டிப்-பெட்பிற்-றுதிசெய
ஆண்டி-வேட-மெடுத்தனரே
அன்பர்க்-கருள்-செய்ய-நாதரே.

துங்கந்-தங்கும்-சங்கம்-முழங்கிட்
தங்கம்-பொங்கும்-பிங்கல-சீடனும்

ஜோதிபூத-கணங்களுமே
துதிபுரி-ஜங்கம-ரெனவரவே

துய்யன்-செய்யன்-மெய்யன்-தருநிகர்
கையன்-ஐயன்-வையந்-துதிசிவன்

சோணைக்கேக-வெழுந்தனரே
சொல்லற் கருந்-தேவதேவரே.

வசனம்.

தேவர்களெல்லாம் மலர்களைத்தூவித் துதிசெய்ய சர்வவியாபியாகிய பரமசிவம் ஜங்கமத் திருவுருக்கொண்டு பூதகணங்களும் ஜங்கமக்கூட்டமாய்த் தொடர்ந்துவரக் குபேரனாகிய சீடனோடும் அருணையம்பதிக் கெழுந்தருளி அன்னமேற்கின்றார்.

இராகம்-இந்துஸ்தான்-காபி-தாளம்-ரூபகம்.

அன்னமன்னங் காணுச்சிவன்
அடியார்களுக் கீவீரே
அன்பனும்வல் லாளனுளிவ்
வருணைநகர் வாழ்வோரே (அன்ன)

தரும்த்துவச மோங்கமிகச்
சர்வஜகமும் போற்றருணைத்
தருவளர்நாட்டிற் பொலியும்
சத்யரே கொண் டேகருணை (அன்ன)

புத்திபுகழ் நல்லொழுக்கம்
பொருளும் பத்தியுங்கூடி
புத்திரப்பே றும்பெறுவீர்
புந்திமகிழ்ந் தேநாடி. (அன்ன)

சுற்றமிடு காடுமட்டே
துணைவியோ வீடுமட்டே
மற்றவரெல் லாருங்கூடி
வழியிற்பிரி வார்விட்டே. (அன்ன)

செய்யுந்தருமத் துணைவன்தானும்
ஜெகத்திற்காக்கு மேமேலும்
தெய்வலோகத் தாள்திறந்து
சேர்க்குஞ்சத்தி யத்தாலும். (அன்ன)

வசனம்.

தருமத்தை வசத்தைநாட்டி ஆளுகின்ற வல்லாள மஹாராஜனுடைய அருணையம்பதியில் வாழ்கின்றவர்களே பிரமதேவன் அன்னமாகியும் காணுதற்கரிய சிவபெருமானது அடியார்களுக்கு அன்னமிடக்கூடாதா அன்னமிடுவீராயின் புத்தியும் பத்தியும் புகழும் ஒழுக்கமும் பொருளும் புத்திரப்பேறும்பெறுவீர்கள். மனைவியானவள் தானிருக்கும் வீட்டண்டையே நின்றுவிடுவாள் சுற்றத்தார்கள் மயானமட்டுமே வருவார்கள், மற்றவர்கள் கொஞ்சதூரம்வந்து வழியிலேயே பிரிந்துவிடுவார்கள், நீங்கள் செய்யும் ஓர் தினை அல்லது எள்ளளவு தர்மமோ இவ்வுலகத்துள்ளவரைக்கும் காப்பதன்றி சுவர்க்கலோகத்தின் கதவையுந் திறந்துவழிவிடும்.

இராகம்-காபி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

அமுதளிப்பார் இன்னங் காணோம்
அரும்பசியால் வாடுகின்றோம்
குமுதவாயார் யாருமில்லையோ.

அருந்ததிபோல் கற்புவாய்ந்து
அழகியதம்பதியைப்போற்றும்
அருந்தாய்மார்கள் யாருமில்லையோ.

புருஷன்சொல்லே சுருதியாகப்
போற்றுகின்ற புண்யமேவும்
அரிவையர்கள் யாருமில்லையோ.

அன்னவயல் சூழுமிந்த
அருணையெனும் பொற்பதியில்
பொன்னுடையோர் யாருமில்லையோ.

சைவநெறி சார்ந்துசிவ
சங்கரன்றாள் போற்றுகின்ற
மெய்யுடையோர் யாருமில்லையோ

அன்பர்பசி வேளையோர்ந்து
அன்பினோடு மன்னந்தரும்
நன்னடையோர் யாருமில்லையோ.

வசனம்.

இதுவரையிற கூவியும் அரும்பசியால் வாடுகின்ற எங்களுக்கு இன்னம் அமுதளிப்பவரைக்காணோம், அருந்ததிபோற்கற்புவாய்ந்து தத்தம் கணவரையே தெய்வமாகப் போற்றுந் தாய்மார்கள் ஒருவருமில்லையோ, பிரபுக்கள் யாருமில்லையோ, சைவாசாரத்துல்யர்கள் ஒருவருமில்லையோ, எங்கள் பசிவேளையறிந்து அழைத்துக்கொண்டு

போய்த்தொழுது அன்னம்படைக்கும் நற்றவத்தோர் யாருமில்லையோ என்றிவ்விதமாகப் பசிப்பிணியால் வருந்தி யாசிப்பவர்போலக் கூவிக்கொண்டு கணிகையர்வசிக்கும் வீதியில் பரமசிவனுன சங்கமர்போனூர்.

இராகம்-காம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆயிரங்கண் வேணுமன்பர்களே-அருணை
அற்புதக்கணிகைமாதர்-பொற்பினைக்குறித்துக்காண (ஆயிர)

அநுபல்லவி.

தாயகனண்ணுமலையான்-தண்மலர்ப்பதந்துதிக்கும்
சத்தியமிருத்தபொது-தையலர்வனப்பைக்காண (ஆயிர)

சரணம்.

அந்தமமரும்விழியெ-னுந்தேனிலகும்முகார
விந்தம்தோ கோடியான சந்த்ரபிம்பம்
சந்தமிகும் பந்துமந்த்ர பம்பரத்தையுஞ்ஜெயித்த
சந்தனந் திமிர்ந்தகுயஞ் சொர்ணகும்பம்
கந்தரமெனுங்குழற்ப-ளிங்கெனக்கதிக்குந்தொடை
கன்னகன் ஞாலத்திலங்கும் வாழைத்தம்பம்
விந்தைநிதம் பம்புயங்கத்-தின்படமெனப்புகல
விளங்குங் கணிகைமாதர் பொற்பைக்கண்டிடவே. (ஆயிர)

வசனம்.

அருணசலேஸ்வரர் திருவடிக்கமலங்களை மறவாமற்றுதிக்கும் சத்தியமொழியுடைய கணிகையர்களுடைய முகாரவிந்தமானது கோடிசந்த்ர பிம்பத்தைப்போற் பிரகாசிக்கின்றது, பந்தையும் மந்தரகிரியையும் பம்பரத்தையும் ஜெயித்து கந்தகதம்ப கஸ்தூரி சந்தனந்திமிர்ந்த தனங்கள் சொர்ண கும்பத்தைப்போற் பிரகாசிக்கின்றன, கூந்தல் மேகத்தைப்போலும் பளிங்காகிய தொடைவாழைத் தம்பத்தைப்போலும், அற்புதம்வாய்ந்த நிதம்பம் அரவின்படத்தைப்போலும் பிரகாசிக்கின்றன, இவர்கள் வனப்பைக்காண ஆயிரங்கண்கள் வேண்டுமே என்றிவ்வாறு புகழ்ந்து அக்கணிகைமார்களை நோக்கிக் கூறுகின்றூர்.

கணிகைகள்.

சங்கமர்.

கணிகைமாரேயுங்கள் வீதிதனை-நாங்கள்
கண்டவுடன்காமன்கணை தொட்டுவிட்டான்-மிக்க
கவலையினுல் நாங்கள் மதிகெட்டுவிட்டோம்,

வசனம்.

கணிகைமாரே உங்கள்வீதியை நாங்கள்கண்டவுடன்மன்மதன் கணைகளை எங்கள்மீது தாறுமாறாய்த் தொடுத்துவிட்டு ஆர்ப்பரிக்கி ன்றான் அதனால் அவசமுற்று எங்கள்மதியை யிழந்தோம் என்று சங்கமர் கூறினார்.

கணிகையர்.

தொட்டுவிட்டால்முழுகிப் போனதென்ன-கணையைச்
சுக்கல்சுக்கலாக்கிவிடநாங்களிருக்க-மிகு
சுத்தமுள்ள சங்கமரே பஞ்சம்வேண்டாம்.

வசனம்

ஆனால் முழுகிப்போனதென்ன அக்கணைகளைப்பேதித்து அக்கா மனும் அஞ்சும்படிச் சுகத்தைத்தர நாங்களிருக்கையால்நீங்கள் ஒன் றுக்கும் அஞ்சவேண்டாம் சங்கமரே என்று கணிகையர்கூறினார்.

சங்கமர்.

வேண்டாம் வேண்டாமென்ற கணிகைமாரே-பொன்னும்
வேண்டாம் வேண்டாமென்றுசொல்ல வாயுமுண்டோ-
இந்த, வெற்றண்டிகளிடம்பொன்னுமுண்டோ-உண்டோ.

வசனம்.

காமன்கணைக்கு அஞ்சவேண்டாமென்ற கணிகைமாரே பொ ன்னும் வேண்டாமென்று சொல்லுவீரோ, வெற்றண்டிகளிடத்தில் பொன்னுமிருக்குமோ என்று சங்கமர் கூறினார்.

கணிகையர்.

ஏதுமில்லாவிட்டால் சங்கமரே-நாங்கள்
எப்படிப்பிழைப்போம்முக்யம் பொன்னேபொன்னே சுத்த
ஏழையும்பொன் தாராராயின் சேரோம் சேரோம்.

வசனம்.

ஏழையாயிருந்தாலும் எங்களுக்குக் கொடுக்கவேண்டிய பொ ன்னைத்தந்தால் தான் சேருவோம் அதுவே எங்கள் பிழைப்பானபடி யால், எங்களுக்கு முக்யம் பொன்னேயாகும் என்று கணிகையர் கூறினார்.

சங்கமர்.

சேரவோரிராத்திரிக்குப் பரியமாக-நீங்கள்
செப்புவதோ எத்தனைபொன் சொல்வீர் சொல்வீர்ஒரு
சிறிதும்வஞ்சம்இல்லாமலே சேருவீரோ.

வசனம்.

ஆனால் ஓர் இராத்திரி முழுதுக்கும் உங்களுக்குப் பரியமாகக் கொடுக்கும் பொன் எவ்வளவு மனதிற்களங்கமில்லாமல் இருப்பீரோ என்று சங்கமர் கூறினர்.

கணிகையர்.

ஆயிரம்பொன்னெவரேனுந் தருவாரானால்-நாங்கள்
அன்னவரையேமகிழ்ந்து சேர்வோம் சேர்வோம்-அஷ்ட
ஆலிங்கனமுமகிழ்ந்து செய்வோம் செய்வோம்.

வசனம்.

யாவரேனும் ஆயிரம் பொன் தருவாரானால் அவருடன் அஷ்ட வித ஆலிங்கனமும் மகிழ்ந்துசெய்து இன்பத்தைக் கொடுப்போம் என்று கணிகையர்கள் கூறினார்கள்.

சங்கமர்.

அப்படியேஆயிரம்பொன் பெற்றுக்கொள்வீர்-நீங்கள்
அன்புடனிராமுழுதும் பிரியாமலே-அனைத்
தின்பந்துதரவேண்டும் வாரும் வாரும்.

வசனம்.

அப்படியே ஆயிரம் பொன்பெற்றுக்கொள்வீர் ஆனால் இராமுழுதும் பிரியாமல் எங்களுடன் இருந்து இன்பத்தைத்தரவேண்டும் வாரும் என்று சங்கமர் சொல்லச் சம்மதித்துப் பொன்னைப்பெற்றுக்கொண்டார்கள் கணிகையர்கள்.

இராகம்-ஹேமன்-தாளம்-ஆதி.

ஈசசங்கமர்போது மாதரொவ்வொருத்திக்கும்
இன்பத்திற்கொவ்வொரு ஆண்டியைநியமித்தார் (ஈச)
நியமித்திமைப்பொழுதும நீங்காதிராமுழுதும்
நேர்த்தியாய்க்காலம்போக்க நிமலனவர்க்குஞ்சொன்னார் (ஈ)
சொல்லிக்குபேரனுருஞ் சீடனுடனேபுகழ்
தோன்றல்வல்லாளன்றனைச் சோதித்திடச்சென்றார் (ஈச)

வசனம்.

அப்போது சங்கமவேடங்கொண்ட சிவபெருமான் ஒவ்வொருத்திக் கொவ்வோர் ஆண்டியை நியமித்து ஓர் இமைப்பொழுதாவது நீங்காமல் கங்குல் விடியுமளவும் காலம் போக்கும்படி அவர்களுக்குச் சொல்லிச் சீடனாகிய குபேரனோடு அரசன் அரண்மனையைத் தேடிச் செல்லுகின்றார்.

இராகம்-நாதநாமக்கிரியை-தாளம்-சாப்பு.

வல்லாளபூபதிஸ்தானம்- மஹாஸ்தானம்-வாசஸ்தானம்-அதை.
மகிழ்ந்துகாட்டுவோர்க்குண்டு கைலைஸ்தானம் (வல்)

தருமம்புரியபறைசாற்றிக்-கொடியேற்றி-மிகப்போற்றி - உயர்
தாரணிமகிழ்ந்திட வறம்பலவாற்றும் (வல்)

பேசரும்வடிவுள்ளகாத்ரன்-நல்லகோத்ரன்-சற்பாத்ரன் - சிவ
பெருமானடியைப் புகழ்ந்திடுந்தோத்ரன் (வல்)

எங்கும்புகழ்ந்திடுஞ் சிலாக்யன்-சத்யவாக்யன்-சௌபாக்யன்
மிக, இசைத்தற்கரிய மஹாவைபோக்யன் (வல்)

வசனம்.

என்றிவ்விதமாக அரசன் அரண்மனையைத்தேடிச் செல்வதை ஓர்தூதனறிந்து அரசனுக்குத் தெரிவிக்கச் சென்றான்.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

சேதிசொல்லவந்தேன்-ஒரன்பர்
சேதிசொல்லவந்தேன்

அநுபல்லவி

காதலால்நினதுபேர் உரைத்தார்-மிகக்
கருதிநின்மந்த்ரமெங்கென் றிசைத்தார்-அதைக்
காதினிற்கேட்டுநான் களித்தே-நின்
காமர்செஞ்சீரடிவந்தடுத்தேன் (ஒரன்பர்)

திருமிகுந்தெய்வநீ றுடையார்-மஹா
செவ்வியகாஷாயநல் லுடையார்-தவ
திருத்தமுள்ளசங் கமராய்-உம்மைத்
தேடிநம்வீதிபி லேவாரார் (ஒரன்பர்)

வசனம்.

இராஜகெம்பீரா சரணம் காஷாயாம் பரதாரியாய்த் திருநீற்றுப்பொலிவோடு விளங்கும் ஓர் ஜங்கமர் உமதுபெயரைக்கூறி அரண்மனையெங்கேயென்றுகேட்டுக்கொண்டு நமதுவீதியில்வருகிறார் அச்சங்கதியைத் தேவரீருக்குத்தெரிவிக்கவந்தேன் என்று தூதுவன்சொல்ல அரசர் பெருமான்கேட்டு ஆவலுடன் எதிர்சென்று கூறுகின்றார்.

டோரு

சிற்பரன்சிவனெம் மிறையெனவொளிருந்
திருவுருவுடைய சங்கமரே
அற்புதவருட்குரு மூர்த்தியேநின்றன்
அருமலர்ப்பொற்பத மேசரணம்

தெரியேன்முன்னோர் செய்தவப்பயனோ
சிறியேன்செய்த புண்ணியமோ
பரிவாய்வரவிங்கருள் சுரந்ததுவே
பரமானந்தங் கொண்டேனே

போற்றி போற்றி நின்றாள் போற்றி
பொற்பீடத்தி லெழுந்தருள்வாய்
சாற்றுவீர்நின்றன் திருக்குறிப்பறியேன்
தமியனுக்கிடத் தகும்பணியே

வசனம்.

எமது இறைவனாகிய சிவபெருமானைப்போலுந் திருவுருவுடைய சங்கமரே அருட்பெருங்குருவே உமது திருவடித்தாமரைகளே சரணம். தேவரீர் இவ்விடத்திற்கெழுந்தருளப்பெற்றது முன்னோர்கள்செய்தபுண்ணியத்தினாலோ சிறியேன்செய்த தவப்பயனாலோ தெரியேன், உம்முடையபாததரிசனமாத்திரத்தினாலேயேபரமானந்தம் பொங்கித்ததும்புகின்றது என்று பலவாறு துதித்துப்பணிந்து பிரகாசம்பொருந்திய சிம்மாசனத்தின்மீது எழுந்தருளச்செய்து சுவாமி தேவரீர் திருவுள்ளக்குறிப்பறியேன் அடியேன்செய்யத்தக்க பணியைக் கட்டளைபுரிவீரென்று போற்றிநிற்க ஜங்கமராகிய சிவபெருமான் அரசனைக்கிருபையுடன்பார்த்து ஆசீர்வதிக்கின்றார்.

இராகம்-கேதாரம்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வாழ்வாய் மிகவாழ்வாய் வடி
வாளனே வல்லாளனே மிக

சரணம்.

தாழாதணி யுலகாளுக சரசாவதி குணபூபதி (வாழ்)
வாழையறு கால்வீழென மனமோகன கனவாகன (வாழ்)
சைவப்பொலி வெய்திச்சிவ தவமோங்கவே அவமேங்கவே ()

வசனம்.

அதிவசிகரமுள்ள வல்லாளமகாராஜனே சைவப்பொலிவெய்திச் சிவபெருமானைத்துதிக்கும்தவம்ஓங்கவும் பாவங்கள்ஏங்கவும்

ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி வாழையடி வாழையாய் உலகத்தை அரசாட்சிசெய்து வாழக்கடவாய் என்று ஆசீர்வதித்தருளினர்.

லாவணி.

குழலாசே நானுமேகூசாது
கூறுவேனினி கேட்டிடுசாது
கணைகளைப்பாராமல் விட்டிடுகின்று
காமனுந்தாறுமாறு யின்று
துணிவுடன்என்றனை மிகக்கனன்று
தூற்றிவிட்டானதனுற் சுழன்று
பிணியுறவே மெத்தவுந்தாடியே
புன்னைக் கண்டனன்
தணிப்பான் இந்தசமயமொரு
பொன்னை மேதருவித் துதவுபுண்யா

வசனம்.

நீ நற்குணம்வாய்ந்த அரசனானபடியால் நாணும் நாணம்என்பதைத்துறந்து துணிவுடன் என்கோரிக்கையைச்சொல்லுகிறேன் இன்று மன்மதன் என்மீது கோபித்துத் தாறுமாறாய்க் கணைகளை வாரியிறைத்துவிட்டான் அதனால்வருந்தி யுன்னைவந்தடைந்தேன் அக்தக்காமப்பிணியைநிவிர்த்திசெய்யத்தக்க ஔஷதம்போலும்ஓர்கணிகையைத்தருவித்து உதவிசெய்வாயென்று ஜங்கமவேடங்கொண்ட சங்கரன்சொல்ல அரசன் சங்கமனைப்பார்த்துச்சொல்லுகின்றான்.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

நீதிதானோ நீர்சொலலும்-ஓசங்கமரே
நின்றன்கீர்த்திக்கடுக்குமோ

சரணம்.

மேதினிதன்னில் மேனி-தனை
மினுக்கியரிடத்திலபி மானி-யான
போதுசுத்தமுள்ள ஞானி
புண்யத்துக்காமே ஹானி (ஓசங்)

பரத்தையர்மோகம் பொல்லாது-கொடும்
பாவத்தழுத்துமோ ரேது-சிவ
சிரத்தைகொண்டநல்ல சாது
ஜெகமுமேசுந்த காது (ஓசங்)

மாதினைப்பேசி முடித்து-நீர்
மணந்திருக்கவே களித்து-இன்று
சாதித்திடுவன்வேசி யடுத்து
சரிப்பதொவ்வாது குறித்து (ஓசங்)

வசனம்.

ஓ சங்கமரே நீர்சொல்வதுதர்மமோ உமது புகழுக்கழகோ மெய்ஞ்ஞானியாயுள்ளவர் பரத்தையரிடத்தில் அபிலாஷையுற்றால் அவர்தவமெல்லாம் அழிந்துபோமே உலகமும் பழிக்குமே ஆதலால் நீர் எப்போதும் களித்திருக்கும்படியாகத் திருமணஞ்செய்துவைக்கிறேனென்று அரசன்கூற அதற்குச்சங்கமர்சொல்லுகிறார்.

லாவணி.

மன்னா இன்றுதான் நன்னலான் எனையே
யுன்னி மிகவுன்னி
வாட்டும்வாதை தீர்ந்திடக்கணிகையேசொன்னேன்
பன்னிமிகப்பன்னி
மன்னுமேதான் வெகுவிதவின்னலை
எனறுமேதான் மணத்தால்பின்னல்
மணந்திண்டேன் துயர்வேண்டேன்-நான்
வந்துகேட்டதனைத் தந்திடாயிதுநன்றோ-அறமன்றோ.

வசனம்.

கேளும்அரசனே நீசொல்லிய மணம் எப்போதும் துன்பத்திற்கிடனாயிருக்கும் சதாசிந்தாய்வந்த காமப்பிணியைநீக்கும் ஔஷதம் விலை மின்னார்களுக்குக் கைவல்யப்பட்டதேயன்றி மற்றஸ்திரிகள் அறியார்கள், ஆதலால் நான்சொன்னபடிசெய்யக்கடவாய் கேட்டபடிதருவேனென்று துவசத்தைநாட்டிவிட்டு என்னென்னமோ கற்றகல்வியெல்லாம்பேசுவதுயுக்தமோ ஆ ஆ நன்றாயிருக்கிறது நின் தர்மம்என்று ஜங்கமராகிய பரமசிவம் கோபித்தவர்போற்சொல்ல அரசன் நடுநடுங்கிச் சங்கமரைப் பலமுறைவணங்கிச்சொல்லுகிறான்,

இராகம்-பிலஹரி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஜங்கமவினோதனே-மாதைத்-தட்சணமழைப்பனே.

அநுபல்லவி.

துங்கவமுத-சிவசொரூப-சொல்லருஞ்சலாபனே (ஜங்)

சரணம்.

என்றன்குற்றந்தன்னையே இனிதிரங்கியுட்கொளா
தன்னையிற்பொறுத்தருள்வாய் அடியருக்கருள்குருஸ்வாமி ()

வசனம்.

சுவாமி தாயைப்போலும் என்குற்றத்தைப்பொறுத்தருள்வீர் இதோ ஓர்க்ஷணத்தில் தேவரீர்கருத்தின்படி கணிகைமாதைஅழைக்கிறேனென்று ஓர்தூதனைப்பார்த்து அரசன்சொல்லுகிறான்.

இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்.

அழைத்துவருகுவாய் ஓதூதா
அழகுள பெண்ணை (அழை)

காமரசமாக ஓதூதா
கதித்திடும் பெண்ணை (அழை)

இன்பரசமாதை ஓதூதா
இக்ஷணந் தனில் (அழை)

அன்பர்மகிழவே ஓதூதா
அற்புதப் பெண்ணை (அழை)

காற்றிற்சென்றுநீ ஓதூதா
காத லுடனே (அழை)

வசனம்.

வாயுவேகம் மனோவேகமாய்ச்சென்று இன்பரசக்கியமான ஓர்கணிகைமாதை அழைத்துவரக்கடவாய்தூதனேயென்று ஆக்ஞாபிக்க அத்தூதன் கணிகையர்கள்வீடுதோறுஞ்சென்று அழைக்கின்றான்

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆரம்மா ஆரம்மா-இங்கே-கோமான்
அழைக்கிறார்-மீறினால்-பிழைப்பீரோ பின்னால்

சரணம்.

சீராரோரடியவருடனேசரசமாடிச்
சித்தசனஞ்சிடலீலைசிறக்கச்செய்பவர்வேண்டும்(ஆரம்)
சங்கரன்போலொளிர் சங்கமரைவருத்துந்
தனலாமதன்வேதையைத் தணிக்கவல்லவர்வேண்டும் ()
தாமதமாகாதினி அரசனுக்கினேநேரும் (னேன்
தடுத்தால்மஹா துன்பப் படுத்துஞ்சொன்னேன்சொன்

வசனம்.

ஆரம்மா இந்தவீட்டில்ஆரம்மா சிறப்புப்பொருந்திய சங்கரன்போல்விளங்கும் ஓர் தவசிரேஷ்டரிடம் சரசசல்லாபமாய் இருந்து அவர்காமவேதனையைத்தணிக்கவல்லவளை நமது அரசவன்

ளல் சீக்கிரமாய் அழைத்துவரும்படி ஆஜ்ஞாபித்தார் சீக்கிரம்வரக் கடவீர்கள் இச்சொல்லைமீறினால் ஆக்கினைவருமென்று தூதுவன் சொல்ல அதற்குக் கணிகையர்கள் கூறுகின்றார்கள்.

இராகம்-முகாரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வாக்கூடுபோநீர் கூறுவீர்-ஒதூதுவரே

அநுபல்லவி

அரியாங்கபர்வந்து அங்கஜனால்மெலிந்து
பரிவுடனேதான் பொன்தந்து
பறைகின்றாரே (வரக்)

பொன்னுமுன்பெற்றதனால் புணரப்பொருந்தியதால்
இன்றுபோய் நாளையேயானால்
இசைந்திடுவோம் (வாக்)

தெய்வமேவந்தபோதும் திறலரசென்றபோதும்
வையப்புரண்டதாம் போதும்
வார்த்தைபிறழோம். (வரக்)

வசனம்.

ஒதூதனே கேட்கக்கடவாய் ஜங்கமக்கூட்டங்கள்வந்து எங்களனைவருக்கும் இன்றுபகலே இராமுழுதும் சுகலீலைபுரியப் பரியப் பொன்னையுங் கொடுக்கப்பெற்றுக் கொண்டோம். இனித்தெய்வமே வந்தபோதும் மஹாராஜனே வந்தபோதும் வையமெல்லாம் புரண்டுபோவதானாலும்சத்தியம்பிறழமாட்டோம்இன்றுபோய் நாளையானால் யாதொரு தடையுமின்று மேலும் திருட்டல்ல புரட்டல்ல இதோ எதிரில் தானிருக்கிறார்களே என்னமாய்ப்பறைக்கிறார்கள்பாரும் என்றுசொல்ல அதற்குத் தூதுவன் ஒன்றுஞ்சொல்ல மாட்டாமல் மனம்வருந்தி நின்றான்.

இராகம்-முகாரி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

என்னவின்று செய்வேன்-அரசன்முன்
ஏதுசொல்லி யுய்வேன்

அநுபல்லவி,

மன்னும்வேசியர்வீடு ஒவ்வொன்றும்நுழைந்தேனே
மருவித்தொண்டரோடவர் இருக்கவுங்கண்டேனே(என்)

சரணம்.

திட்டிச்சாடுவானே சோம்பேறியென்று
திரஸ்கரித்தோட்டுவானே
துட்டக்கழுதையேற்றிச் சுற்றச்செய்திடுவானே
சொல்வோம்சத்தியமேதானசிவனுஞ்சதிசெய்வானே (என்

வசனம்.

கணிகையர்வீடு ஒவ்வொன்றும் நுழைந்தும் ஒருத்திகூட அக
ப்படுவது கஷ்டமாய்விட்டதே அவர்கள் யாவரும் ஜங்கமரோடு
மருவியிருக்கின்றார்களே அவர்களையும் நிந்திக்கக்கூடாதன்றோஇனி
ச்செய்வதென்னே அரசன்முன் என்னசொல்லிப் பிழைப்பேன்
சோம்பேறி என்றுதிட்டிக் கழுதையின்மேலேற்றி ஊரைச்சுற்றும்
படியடித்து ஓட்டிவிடுவானே ஆனாலும் உண்மையைச்சொல்லு
வோம் தெய்வம்விட்ட வழியாகிறதென்று துணிந்து அரசன்முன்
சென்று சொல்லுகிறான்.

லாவணி.

நிதியே கருணைவாரிதியே வல்லாளபதியே நின்பாதங்கதியே
பதியிலவர்களில் ஒருயாதடைகிலேம்
பணமுன்பெற்றாரின்றுதவார்.

வசனம்.

கருணைசமுத்திரம்போன்ற மஹாப்ரபோ நின்பாதமே கதிக
ணிகையர்கள் யாவரும் முன்பணம் பெற்றிருக்கின்றார்கள் இன்று
ஒருத்தியும் உதவமாட்டாள் என்று தூதுவன் நமஸ்கரித்துச்சொல்
ல அரசன் தூதனைநோக்கிச் சொல்லுகின்றான்.

லாவணி.

மூடா ஒழுமூழமூடா நவில்மதிகேடா
முன்னிநீதேடாய்-சீசீ
ஓடிபோர்மாதை யழைத்துவந்தெனக்கே
யுயர்வைத்தேடாய் போடா

வசனம்.

ஓர்விலை மின்னுளைத்தேடி அழைத்துவந்து எனக்குப் பெருமை
யைக் கொடுக்கத்தக்க முயற்சியெடுத்துக்கொள்ள வில்லையல்லவா
சீ மூடா அப்பாலேபோ என்று கோபித்து மஹாவிசனத்தோடு மந்
திரி மாரைப்பார்த்துச் சொல்லுகின்றான்.

விருத்தம்.

சங்கமர்க்குரைத்தவாய்மை தவறுதலருணையோங்குஞ்
சங்கரன்செயலோவென்றன் தவக்குறைதானேயாதோ
நங்கையின்றிருத்திதானு நமக்குதவாமற்போன
தெங்கடுத்திடுநீர்சொல்லீ ரேற்றமந்திரிகளாவீர்.

வசனம்.

நாம் பரமசிவத்தின் அடியவராகிய சங்கமருக்குரைத்த மொழி தப்பிப்போதல் அருணசலேசர் திருவுளச்செயலோ, அல்லது தவக் குறைவோ, வேறுயாது காரணமோ ஒரு பெண்ணுவது நமக்குக்கி டைக்காமற் போனது, இது எந்த ராஜ்யத்திலடுக்கும் நீங்கள் யோசி த்துச் சொல்லுங்கள் தக்கமந்திரிகளே யென்றான் அரச வள்ளல்.

விருத்தம.

சிந்தையிற்கவலையென்கொல் சிவனருள்பருகிவாழும்
எந்தையேயரசரேறே யிக்கணம்யாமேசென்று
விந்தைசேர்கணிகைமாதைவிரைவுடன்கொணர்வோமென்று
மந்திரிமாரும்வேசி மாதரைவேண்டுவாரே.

வசனம்.

ஸ்ரீசிவபெருமானது திருவருளைப்பெற்று வாழும் எமது தந் தையே ராஜாதிராஜனே இந்தக்ஷணமே யாங்கள் சென்று கணிகை மாதைக் கொண்டுவருவோம் என்று தைரியஞ்சொலலிக் கணிகைய ரிடத்துச்சென்று வேண்டுகின்றார்கள் மந்திரிமார்கள்.

இராகம்-பிலஹரி-தாளம்-ஆதி.

பல்லவி.

சோபிதகணிகைமாரே
சொருசுடனொருவர்தான்-வருவீரே

அநுபல்லவி.

பூபதிஜங்கமரைப்புந்திமிக்குவந்தணைந்திட (சோபி)

சரணம்.

அதிவடிவுளமா
மதிபுரைவதனங்
கதியனநடையாள்
ரதியெனஇல்கிய (சோபி)

ஆதரமொடு
மாதனமொளிர்
பாதகொலுசையும் பட்சத்தோ
டேகருவதும
லாதினியகல
சாதமீகுவம் இஷ்டத்தோ
டேதகுதித்திக்தோ
நாதர்ததத்தித்தா
தாவெனுகிர்த்தத்தோ
டரசரொலாமகிழ்கொளவே
பரிவாய்நடனமிடு (சோபித)

வசனம்.

இரதியைப்போலும் அதிக அழகும் அன்னநடையும்பொருந்தி மன்னர்கள் மகிழும்படியாகப் பரதநாட்டியஞ் செய்யுங் கணிகைமாதரே நமதுஇறைவனைநாடி வந்தஜங்கமருடைய காமநோயைத்தணிப்பீரேயானால் திவ்யமான அறுசுவைப் பதார்த்தங்களோடும் அமுதிட்டு அளவற்ற ஆடையாபரணங்களும் பொருளும் தருவோம் யாராகிலும் ஒருவர் வரவேண்டுமென்று மந்திரிமார்கள் வேண்டக் கணிகையர்கள் மந்திரிகளைநோக்கிச் சொல்லுகின்றார்கள்.

இராகம்-கருடத்வனி-தாளம்-ஆதி.

பல்லவி.

சமயம்வரவே முடியுமோ ஐயா
சங்கமருக் கின்றியாம் ஆளானேமெய்யா

அநுபல்லவி.

அமுதகுணேந்த்ரா அற்புதனேசந்த்ரா
கமனவொய்யாரா, கனமுள்ளதந்த்ரா (சமயம்)

சரணம்.

இன்றுபகல்பொன்னும் இத்தொண்டரிடமே
இன்றுமுழுதுமே யின்பத்துக்கேற்றோமே
நன்றுநாளையானால் நாங்கள்வருவோமே
மன்னிப்பீரெங்களை மந்த்ரிகள்சிங்கமே(சமயம்)

வசனம்.

இதோ எங்களருகில் சரசமாடிக்கொண்டிருக்கும் இச்சங்கமர்களிடம் சுகலீலைக்கின்று இராமுழுதும் ஒத்துக்கொண்டோம்ஆதலால் இன்றுவரமுடியாது சுவாமி மந்திரிகள்சிங்கமே எங்களைமன்

ளித்தருள்வீர் என்று கணிகையர்கள் வணங்கிச்சொல்ல மந்திரிகள் மஹாவிசனத்தோடும் திரும்பி அரசனைப்பார்த்துச் சொல்லுகின் றார்கள்.

விருத்தம்.

ஐயனேயரசரேறே யடிமலர்த் துணைகள்போற்றிப்
பொய்யிலாக்கணிகைமாதர் புகலருமனைகளெல்லாம்
தெய்வசங்கமர்நிறைந்து திகழ்சுகம் நுகருகின்றார்
மெய்யனேயொருமாதேனுங் கிடைக்கிலாள்விந்தைதானே.

வசனம்.

எமது ஐயனே நின்திருவடித் தாமரைகள்போற்றி சொல்லுத ற்கரிய கணிகைமார்கள் வீடுகள் தோறும் நுழைந்து பார்க்குமள வில் சங்கமக்கூட்டங்களே நிறைந்து சுகமனுபவித்துக்கொண் டிரு க்கிறார்கள் ஒருமாதேனுங் கிடைக்கப்பெற்றிலேம் ஐயோ ஈதென்ன அதிசயம் என்று கூறினார்கள் மந்திரிகள். இதைக்கேட்ட அரசன் சொல்லுகிறான்.

விருத்தம்.

அற்பமிதுகாரியந் தானமக்கரிதா யிருப்பதென்கொலந் தோவந்தோ, சிற்பரனார்திரு விளையாடலின்றிறமோ வென் றுமிகச்சிந்தைநொந்து, அற்புதசங்கமர்க் குரைத்தவனாந்தரு வேனென்றெழுந்தேயாவலோடும், விற்பொருநன்னுதற் கணி கைமாதர்பா லிறையணுகி விளித்தான்மன்னே.

வசனம்.

இந்த அற்பமான காரியத்தைச் சாதிக்கமுடியாமற் போகிறதே ஐயோ இதுவும் ஜெகதீசனுடைய திருவிளையாடல்தானோ சங்கமர் கோரியதை நானேபோய்க் கொண்டுவருவேனென்று கணிகையரிட த்திற்சென்று அழைக்கலுற்றான் வல்லாள மஹாராஜன்.

இராகம்-சுருட்டி-தாளம்-சாப்பு.

பல்லவி.

மாதரே வாரும் சமயம் இப்போ தாவலாய்.

அநுபல்லவி.

கோதிலாச்சங்கமர் கொண்டமதன்வேதை
கொஞ்சிக்குலாவிஅன்பினைக் கொண்டு-தீர்க்கவே, (மாத)

சரணம்.

என்னரசுக்குரித் தானவிப்பதியையும்
இன்னம்வேண்டிய பொருளுந்தந்து-பூரிப்பேன் (மாத)
ஆனைபரிமுதல் ஆபரணமுந்தந்து
அன்னையென்னவேகருதி யென்றும்-பூஜிப்பேன (மாத)
கோலக்கொடுத்தும் காளாய்ப்பணிவிடையும்
கும்பிட்டேநானும் பரவி யென்றும் பூஜிப்பேன் (மாத)

வசனம்.

இன்றையதினம் விரகவேதனையால் மெலிந்து நம்மை நாடிவந்த ஜங்கமருக்கு உம்முடைய நோயைத்தீர்ப்போமென்று சொல்லிய என்மொழியை நிறைவேற்றுவதற்குக் கணிகைமாரே வரக்கடவீர் அப்படி என்மொழியைக் காப்பாற்றுகிற கணிகைமாதுக்கு ஆனை சேனை இராச்சிய முதலானதுங்கொடுத்துஅன்னையைப்போற் கருதிப்பூஜிப்பேன் மேலும் கும்பிட்டு இட்டவேலையுஞ் செய்வேன் என்று அரசன்கூற கணிகையர்கள் அரசனை நோக்கிச் சொல்லுகின்றார்கள்.

இராகம்-ஆனந்தபைரவி-அடதாளம்.

பல்லவி.

பொறுத்தருள்வாய் லோகபாலனே-இன்றொருதினம்
பொறுத்தருள்வாய் லோகபாலனே

அநுபல்லவி.

இறுமாப்போ சிறிதுமில்லை
ஏற்றோமேபொன் னைமுனேதான் (பொறு)

சரணம்.

நினதுநீதி போனடந்து
நேரினிது பதநினைந்து
அனுதினமு மிகப்பயந்து
அடங்கிவாழு மெமைப்புரந்து (பொறு)

வசனம்.

ராஜராஜேஸ்வரா இறுமாப்போசிறிதுமில்லோம்,முன்னுதாகவே இன்றையதினத்திற்குப் பொன்னைப் பெற்றுக்கொண்டு இன்பங்கொடுத்துக்கொண் டிருக்கிறோமே இப்போதவர்களை நிராகரிக்கக் கூடுமோ அப்படிச்செய்வது தர்மமாகுமோ, உமது நீதியின்படியடங்கிவாழும் எங்களை இன்றொருபொழுது மாத்திரம் பொறுத்தருள்வீர் என்று கணிகையர்கள் சொல்லிப் பணிந்தார்கள்.

விருத்தம்.

விலைமாதர்மொழியரவுக் கிடியெனவேகுழைச்செவியின் மேவநொந்து, நிலைகலங்கிநாணமிகவகமடைந்து முகந்திரிந் துநீடுதுன்பத், தலமரல்கொண்டுலகிலுள முடியரசர்யாவரு மே யன்பினோடுந், தலைவணங்கவருள்கொழிக்கு மரசர்சிகாம ணியுமுளந் தளர்ந்தான்மன்னோ.

வசனம்.

கணிகையர்கூறிய மொழிகளைக்கேட்டு நாணத்தோடும் அரண் மனையை யடைந்து மனம்நொந்து நிலைகலங்கி துக்கசாகரத்தில் மூழ்கினான் அரசன்.

இராகம்-ஹிந்துஸ்தான்-தாளம்-ஆதி.

பல்லவி.

ஈசன்செய லேதோதெரியேனே ஜெக(தீசன்)

அநுபல்லவி.

மாசில்கணிகையைத்தேடி வாடிவதங்கினேன்(ஈசன்)

சரணம்.

என்னதான்செய்குவேன் எப்படியுய்குவேன்
இன்னமெங்கேநானும் செவ்வனேவைகுவேன்
நன்மதிபோகுது நாவுமுலருது
என்மொழியுந்தப்பி இழிகின்றதே (ஈசன்)

சங்கமர்முன்புநான் தையலுமின்றுதான்
எங்குங்கிடைக்கவில்லை என்றெப்படிசொல்லுவேன்
நங்கச்சொல்லாயிற்றேநல்லபேர்போயிற்றே
இங்கினியுயிர் தரித்திருப்பேனோ (ஈசன்)

வசனம்.

தெய்வச்செயல என்னமோ தெரிகிலேன், ஒருகணிகை மாதும் அகப்படவில்லையே,என்மொழிதப்பிப் போகின்றதே, சங்கமர் முன் னின்று தையல் கிடைக்கவில்லையென்றுஎப்படிச்சொல்லுவேன்,நங் கச்சொல்லாயிற்றே பேருங் கீர்த்தியும் போயிற்றே, இனி எப்படி யுய்வேனென்று அரசர்க்கரசனாகிய வல்லாள மஹாராஜன் வருந் தும்போது தேவிமார்கள் இருவரும் வந்து சொல்லுகின்றார்கள்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-திரிபுடை.

பல்லவி.

ராஜேஸ்வராகிருபாளா மஹாப்ரபோ
ரஞ்சிதனேநீ துயருற்றதேனோ.

அநுபல்லவி.

தேஜசுறுஞ்சந்த்ர வதனமிகவாடித்
திருநீங்கிருக்கவோ திறமறியோமே (ராஜே)

சரணம்.

சிந்துரகமனுற் புதமேங்காணுமே
சீதசுகாம்ருத மொழிகாணுமே
சுந்தரமானகுறு நகையுங்காணுமே
துங்கமிஞ்சுங்குணு கரனேமனேகரா (ராஜே)

வசனம்.

ராஜராஜேந்திரனுகிய எங்கள் மனேரஞ்சிதனே இப்போது உம்முடைய தேஜசு குறைந்து முகம்வாடி விசனக்குறிகளெல்லாம் பொருந்தி வருந்துங் காரணமென்னையோ? கொஞ்சம் தயைபுரிந்து சொல்வீர் என்று பரிவுடன் வேண்ட அதற்கு அரசன் சொல்லுகின்றன்.

டோரு.

என்னருந்தேவி மார்களேகேளீர்
இன்றொரு முதியோர்வந்து
மின்னுரின்பத் திச்சையுள்ளவராய்
வேண்டினரேயோர் பெண்ணினையே

இசைந்ததற்கெழிலார் கணிகையர்வீதி
எங்குந்திரிந்துமோர்மாது
இசைவதற்கரிதாய் விட்டதென்செய்வேன்
என்மொழி தப்பினதந்தோ

கேட்டதைக்கொடுப்பேன் என்றறத்துவசங்
கீர்த்தியோ டியர்த்தினவள்ளல்
வாட்டுமுற்றுனிவ் வற்பத்திற்கென்று
வையம்பழிக்கு மினியுய்வேனே

வசனம்.

என்னுயிர்ப்பதமான தேவிமார்களே கேளுங்கள் இன்றோர்பெரியவர் மின்னுரின்பத்திச் சையுள்ளவராய் ஓர்கணிகையை விரும்பினர் அதற்கிசைந்து இதுவரையிலும் அலைந்தேன் ஒருகணிகையுங் கிடைப்பது அரிதாய் விட்டது. ஐயோ என்செய்வேன் என்மொழி தப்பிப் போகின்றதே கேட்டதைக்கொடுப்பேன் என்று தருமக்கொடி நாட்டியவள்ளல் இந்த அற்பகாரியத்தில் தவறிப்போனுனென்று உலகம்பழிக்குமே இனியும் உயிர்தரித்திருப்பேனே என்று துக்கிக்க அதைக்கேட்ட தேவிமார்கள் சொல்லுகிறார்கள்.

தோடு.

மங்களமாய்மண்டல முழுதையுமாள்
மன்னவவெங்கள் காதலனே
இங்கிதற்கின்னல் கொண்டிடத்தகுமோ
ஏழையோமிருக்கவஞ்சுதலேன்
எங்களிளையாள் சல்லமையென்னும்
என்றனையவரிடமனுப்பத்
தங்களுக்கிஷ்ட மிருக்கும்பட்சத்தில்
தடையிலையேநுங் குறிப்பறியேன்.

வசனம்.

மங்களகரமாய் உலகமெல்லாம் ஒருகுடைக்கீழ் ஆளும்ஸ்ரீசக்ரேஸ்வரனாகிய எங்கள் காதலனே இந்த அற்பகாரியத்திற்குத் தாங்கள் இவ்வளவு வாட்டமுறத்தகுமோ எங்களில் இளையாளாகிய சல்லமாதேவி யென்னும் அடியாளை தங்களுக் கிஷ்டமிருக்கும் பட்சத்தில் தங்கள் திருவாக்குக்குப் பங்கம்வராமல் பாதுகாக்கின்றேன் ஆனால் தங்கள் திருவுள்ளக்குறிப்பறியேன் சுவாமி என்று வணங்க அரசன் இதைக்கேட்டுப் பேரானந்தமடைந்து சொல்லுகிறான்.

தோடு.

கனிவுடனென்றன் விரதத்தைக்காக்கும்
கண்மணி பெரியவரோடு
மனமகிழ்ந்தின்ப லீலைசெய்திடுவாய்
மாதரசே மடமானே.

வசனம்.

என்விரதத்தைக் காக்கவந்த மாதரசே கண்மணியே நீமனமகிழ்ந்து பெரியவரைச் சீக்கிரம் திருப்தி யடையச்செய்வாய்என்றுரைத்து அரசன் சங்கமரிடத்துச்சென்றான்.

விருத்தம்.

திருமிகுந்தெய்வநீறு திகழுஞ்சங்கமரேயுன்றன்
திருவுளக்குறிப்பின்வண்ணந் தேடியேயமைத்துவிட்டேன்
மருமலர்க்குழலார்திவ்ய மங்கையோடின்பந்துய்த்துப்
பெருமகிழ்பூத்துக்காவாய் பேறெனவந்ததேவே.

வசனம்.

எனது தவப்பயனாய் வந்த தெய்வமே திருநீற்றினாற் பொலியும் மேனியையுடைய சங்கமரே தேவரீர் கருத்தின்படி அமைத்துவிட்டேன் அங்கீகரித்துக் கொள்ளுவீர் தயைசெய்து பள்ளியறைக்கு எழுந்தருள்வீர் சுவாமி என்று விண்ணப்பஞ்செய்தான் வல்லாளமஹாராஜன்.

சல்லமாதேவி பள்ளியறைக்குச்செல்லுதல்.

டோரு.

மருமிகுந்திவ்ய மஞ்சனமாடி
மல்லிகைமலர்க் குழல்முடித்து
வஸ்திராபரணத்தா லலங்கரித்து
மணஞ்சந்த ஞதிகள்தரித்து
பரிவுடன்பஞ்சகச் சாயங்கொண்டு
பண்ணமர்வீணை யெடுத்து
பகரருமஞ்சத் தொளிர்சிவயோகி
பக்கலினின்று தான்வீணை
திருவுறமீட்டி யின்னிசைகாட்டி
நோக்கிடநசையா யவருமேயசையாச்
சித்திரப்பதுமை போலிருந்தார்
யோகத் திருந்தார்

கண்விழியாமேயசைவுமில்லாமே
காணருமியோகத்திருக்கக்
கண்டவர்தன்மைசல்லமாதேவி
கந்தமார்பனிநீர்தெளித்தும்
எண்ணருமதனுகமவிதிவழுவா
தேத்தித்தந்திரமெலாஞ்செய்தும்
ஈசசங்கமருந்தன்னைநோக்காமல்
இருக்கவேமனநொந்து
அண்ணலார்மொழியுந் தப்பிடலழகோ
ஐயோவென்விதியோ யன்றியார்சதியோ
ஐயனேயிரக்கமுமிலையோ
சற்றுமிலையோ.

வசனம்.

இராஜபத்தினியாகிய சல்லமாதேவி திருமஞ்சனமாடி ஆடையாபரணு லங்கிருதையாய் சுகந்த பரிமளத் திரவியங்களணிந்து பஞ்சகச்சாயங்களை யேந்தி வீணையெடுத்துப் பிரகாசம்பொருந்திய மஞ்சத்தில் அம்ஸதூளிகா சயனத்தின்மீது ஆரோகணித்துக்கொண்டிருக்கும் அடியவர் அருகில் நின்று வீணையை மீட்டிக்கீதம் பாடியும் பெரியவர் சித்திரப்பதுமைபோல் இருப்பதைக்கண்டு அவர்மீது பனிநீர் தெளித்தும் இன்னம் அனேக தந்த்ரங்கள் செய்தும் கண்வி

ழியாமலிருக்க அந்தோ அரசன் மொழிதப்புதல் அழகோ ஈதென் விதியோ அல்லது சதியோ சுவாமி என்னளவேனு மிரக்கமில்லையே என்னசெய்வேன் என்று வருந்துகிறுள்.

இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஹிதாகரவமிதக்ரோதகுணமதிந்த
எளியள்மீதுமேனையா.

அநுபல்லவி.

உதாரகுணநின் பதாம்புஜமிக
சதாபணிவனே சேரென்றதனே (ஹிதா)

சரணம்.

நிதானப்ரமதா சீதபதா
நீதநற்சரத துங்கவிகசிதா
அதிபுனிதா கனபரிதா
வரதாவிரதா உசிதாரமிதா (ஹிதா)

வசனம்.

நிதானமுள்ளவரே ஆனந்தசொருபரே நீதியுள்ளவரே சரச சல்லாபமுள்ளவரே அதிபரிசுத்தரே தவசிரேஷ்டரே வரங்களைக் கொடுக்கத் தக்கவரே அதிமனோரம்மியமானவரே இதத்தைப்புரிவரே நீர் மிதமற்ற இவ்வளவு குரோத குணத்தை எளியவள்மீது காட்டவேண்டிய காரணம்யாதோ உதார குண சீலா உமதிஷ்டப்படி என்னை யணைத்தருளுவாய் உமது திருவடிகளை எப்போதும் பணிவேன் சுவாமி என்று வேண்டியும் விழித்துப்பாராமையால் மேலுஞ் சல்லமா தேவி வருந்திச் சொல்லுகிறுள்.

இராகம்-காப்பி-தாளம்-ஆதி.

பல்லவி.

இந்தவன்மஞ்சாதிப்பது நீதியோ என்சாமி
எப்படியுய்குவேன் துரையே
இரக்கமில்லையோ என்சாமி

அநுபல்லவி.

சந்த்ரஜடாதரன்போன்ற சாமிவந்தேனினி-என்னைச்
சொந்தமாகவணைத்துநீ சுரதலீலைசெய்வாய்நனி(இந்த)

கெட்டபாவிநானுலும் கெஞ்சுகின்றேனையா-உம்மை
நிட்டைசெய்வதடாதினி நிமிஷந்தாளேன்சேருமெய்யா(இ)

அண்ணல்வாக்கினைச்சாதிக்க ஆசையுற்றேயடிதன்னை
எண்ணுமென்னைத்தள்ளாதுநீஏற்றணைக்கவேணுஞ்சாமி(இ)

வசனம்.

சந்திர சடாதரன்போன்ற சங்கமரே உமது சொந்தமனைவியைப்போலும் நினைத்து அணைத்தருளுவாய், நான் எவ்வளவு கொடும்பாவியானபோதிலும் நின் திருவடியையடைந்து கெஞ்சி நிற்கிறபடியால் என்னைத் திரஸ்கரித்து நீர்பாராமல் இருப்பது நீதியோ அரசன் மொழியை நிறைவேற்றுவேனென்று வந்த அடியாளை அலக்கண் படுத்துவது யுக்தமோ, இன்னமும் வன்மத்தையே சாதித்தால் நான் எப்படி யுய்வேன் என்னையே மனமிரங்கி யாள்வாய் என்று பலவாறு வேண்டியும் விழித்துப்பாராமையால் மேலுஞ் சல்லமாதேவி சொல்லுகின்றாள்.

டோரு.

சல்லமாதேவி தந்த்ரங்கள்செய்தும்
சங்கமர்விழித் திலரதனால்
புல்விடமேல்வீழ்ந் தன்னையின்மடியிற்
பொருந்தியகுழந்தை யாயினரே.

குழந்தையாயலறிக் கூவிடக்கோமான்
கொஞ்சியே மனைவியரோடு
விழைந்திதுபகவான் திருவிளையாட்டின்
விந்தையென்றதிசயங் கொண்டார்

அதிசயங்கொண்டே யெடுத்தணைத்தளவி
லானந்தங்கொண் டிடுஞ்சமயம்
விதியரிகாணு விமலனுங்குழவி
விந்தையாய்மறைந்திட நொந்தார்

வசனம்.

எவ்வளவோ தந்திர உபசாரங்கள் செய்தும் எழுந்திராமையால் இன்னமுந் தாமதித்தால் பொழுது விடிந்துவிடும் அரசன் மொழிதப்பிப்போகும் அபகீர்த்திக்காளாவோம் என்று சங்கமராகிய சிவபெருமான் மேல் மெதுவாய்ச் சாய்ந்து ஆலிங்கனஞ் செய்கையில் ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவன் ஏந்துங்குழந்தை வடிவாகி அச்சல்லமாதேவி ஆனந்தமும் ஆச்சரியமுங் கொள்ளும்படியாய்ச் செங்குமுதம்போன்ற அழகிய வாயைத்திறந்து அழத்தொடங்கினர் இதையறிந்த அரசன் சிவபெருமான் திருவிளையாடலென்று ஆவலோடுஞ்சென்று எடுத்து அணைத்து உச்சிமோந்து முத்தமிட்டுக் கொஞ்சிக் குலாவி அளவிலாமகிழ்ச்சி கொண்டிருக்குஞ் சமயத்தில் ஜெகதீசன் மாயமாய் மறைந்தார் அப்போது அரசன் சொல்லுகின்றான்,

இராகம்-ரஞ்சனி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

ஹரஹரா ஸ்ரீகைலைவாசா ஆள்வாய்ஈசனே ஓசம்போ.

அநுபல்லவி.

பரிவாய்பத்மக்கால்வருந்த பாவியானுங்காணவிந்த
படியிலொருசங்கமரான ஓசம்போ

பாரிலாண்டிவேடங்காட்டிப் பாலனுய்ச்சற்றயர்வையோட்டிப்
பதைக்கவேயாம்மறைந்ததென்கொலோ ஓசம்போ

புத்தமுதேவேதமோங்கும் புண்ணியனேஎன்னைத்தாங்கும்
புதல்வனாகத்தோன்றிப்போனதென் ஓசம்போ

ஏழையுய்யும்வகையைச்சொல்லாய்இரண்டுமூன்றுநாளும்நில்லாய்
எங்கிடயாம்எங்கொளித்தாயோ ஓசம்போ

வசனம்.

அரகரா ஸ்ரீகைலைவாசா உமது கருணையினால் சங்கமத் திருக்கோலங்கொண்டு பாதம்வருந்த நடந்துவந்து அடியேங்களுக்குத்தரிசனந்தந்து அற்புதத் திருவிளையாடல் புரிந்து பாலனாய் எங்கள் துன்பத்தைச் சிறிதுநேரம் போக்கிக் கைக்கெட்டியது வாய்க்கெட்டாமற் போய்விட்டதென்று சொல்லும்படி உடனே மறைந்து விட்டீரோ நாங்கள் உய்யும் வகையும் சொல்லாமற்போய் விட்டீரோ தேவாமுதம் போன்றவரே புண்ணிய சொரூபரே சோதனைசெய்யும் பொருட்டோ புத்திரராய்த்தோன்றி மறைந்தீர் எங்களுக்கென்ன கதிஎன்று சல்லமாதேவியோடு ஆற்றொணுத்துயரத்திலமூழ்ந்தினான் அரசர் கோமான்.

லாவணி.

அரசனிவ்வாறு கதறிடக்கைலை
அண்ணலும் உமையவளோடு
நரைவிடையேறி கணங்கள்சூழ்ந்திடவே
நன்மையாய்த்தரிசனந் தந்தாரே.

வசனம்.

அரசன் இவ்வாறு உளந்தளர்ந்து கோவென்று கதறி நிற்கையில் மேன்மை பொருந்திய சிவபெருமானும் உமாதேவியோடு ரிஷபவாகனத்தின் மீதேறி அனேக சிவகணங்களும் தேவர் முதலியவர்களும் புடைசூழ வல்லாள மஹாராஜனுக்குத் தரிசனந்தந்தனர் அப்போது அரசன் துதிக்கின்றான்.

தோடு

சிவசிவசிவஓம் சதாசிவாஓம்
தேவதேவே சரணம்
சீர்மிருங்கைகலை நாதனே சரணம்
சிறந்தசங்கரனே சரணம்
தவவடிவாளா திருமலர்த்தாளா
சாற்றருங் கிருபாளா
தக்கவென்னரசைத் தாங்கவோர்சுதனைத்
தந்தருள்வாய் தருணம்
தன்னிகர்பதியே சிற்சபாபதியே
ஸ்ரீ உமாபதியே திகழ்பசுபதியே
சத்துச்சித்தா னந்தபரனே
கங்கா தரனே

வசனம்.

பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி ஓம் சிவ சிவா ஓம் சதாசிவா தேவதேவா சரணம் கைலை நாதா சரணம் சங் கராசரணம் கருணைசமுத்ரா சபாபதி உமாபதி பசுபதி சச்சிதானந் தா கங்காதரா சரணம் அடியேனுடை செங்கோல் விதியை ஏற்றுக் கொள்ளும்படியாய் ஓர் புதல்வனைக்கடாட் சித்தருளல் வேண்டும் என்று பிரார்த்திக்கப் பரமசிவம் அரசனைநோக்கிச் சொல்லுகின் றார்.

விருத்தம்.

சுந்தரமிகுவல்லாளனேநின்றன் துயர்துமித்தருள்புரிந் திடவே, வந்தனம்புதல்வனுகவாதலினல் மகிழ்ந்துலகாண்டுநீ வாழ்வாய், தந்திரவிதியாமறைபுகலபர சற்கருமந்தனையுன க்கு, வந்துநாமேசெய்திடுவமென்றுரைத்து மறைந்தனன்மலை மகள்பதியே.

வசனம்.

அதிவசிகரமுள்ள வல்லாளனே உனக்கருள்புரியும் பொருட் டாகவே புத்திரனுய்த் தோன்றினேன் நீமகிழ்ச்சியுடன் நெடுங்கா லம் இவ்வுலகை யரசாண்டு வாழக்கடவாய் உனது அந்தியகாலத்தி ல் வேதத்திற்கூறும் அபரகருமச்சடங்குகளை யாமேவந்து செய்து முடிப்போம் என்று வாழ்த்திப் பார்வதவர்த்தினியாரது பதியாகிய சிவபெருமான் மறைந்தருளினார்.

விருத்தம்.

மாதவமேதுசெய்தனனோயான் மாதவன்குழைந்தையா
ய்விளங்கக், காதல்மீக்கூரவெடுத்தணைத்திருகண் களித்திட
வென்றுவல்லாளன், போதவுஞ்சிவன்றன் திருவிளையாட்டின்
பொற்பினைப்புகழ்ந்துளம்பூரித், தோதருமருணைப் பதியினை
யாண்டே யொப்பிலாதோங்கிவாழ்ந்தனனே.

வசனம்.

உமாதேவியை இடப்பாகத்திற்கொண்ட பரமசிவமே குழைந்தையாய் விளங்க ஆசையுடனெடுத்து அணைத்து கண்ணாரக்கண்டு களித்திட என்னமாதவஞ்செய்தேனோ வென்று சிவபெருமான் திருவிளையாட்டின் பொற்பினைப் புகழ்ந்து உளம்பூரித்து அருணையம்பதியை வெகுகாலம் அரசாண்டு நிகரற்று வாழ்ந்தனன் வல்லாள மஹாராஜன் சுபம். சுபம்.

## மங்களம்.

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

மங்களம்-மங்களம்-ஜெயசுப-மங்களம்-மங்களம்.

அநுபல்லவி.

சிங்காரக்கைலாசா சிவசுந்த்ரப்பிரகாசா
திங்களணிமஹேசா தில்லைச்சபேசா (மங்)

தேவிசிற்பரிவீரி திகழும்ஞானவிஸ்தாரி
ஜீவகாருண்யஸ்ரீ சிவகாமசுந்தரி (மங்)

சித்திபுத்திசமேதா சிந்துரமுகநாதா
சத்திமகிழுஞ்சுதா சர்வபூஜிதா (மங்)

தேவயானைவள்ளி சித்தம்கிழ்கண்ணியா
சேவலயில்மயிலோய் சிவசுப்ரமண்ணியா (மங்)

திருஞானசம்பந்தா சீரார்வாதபுரீசா
பொருவிலாச்சுந்தரேசா புண்யவாகீசா (மங்)

சுருதிப்பழும்பொருள் சுத்தசிவமென்றே
பரிவாய்க்காட்டியவரு பத்துமூவரே (மங்)

மன்னர்மன்னவர் துதி மாகருணாநிதி
வன்யகுலோத்துங்க வல்லாளபூபதி (மங்)

# ஸ்ரீவல்லாளதேவர்

சென்னைவேதாகமோக்த சைவசித்தாந்தசபை
மன்னிப்பொலியவருள் மாசோமசுந்தரா(மங்)

நித்தம்பச்சையப்பன் நேயத்தாலேயோதி
பத்திபுரியவருள் பதியேப்ராக்யாதி(மங்)

வாழி-விருத்தம்.

சீரோங்குவேதசிவாகமம்வாழி தேனுவொடுதேவர்வாழி, காரோங்கு களத்திறைவன் கன்னியுண்ணு முலையினொடுங் கலந்துவாழி, பேரோங்குகரிமுகன்வேலவன் சமயகுரவரொ டுபெரியோர்வாழி, தாரோங்குவல்லாளன் சரித்திரக்கீர்த்தன முமிகத் தழைத்துவாழி.

சொற்றசரித்திரந்தன்னை யன்பினுடன் படிப்போருஞ் சொல்லுவோரும், சற்றுமனமுவந்தன்பிற் கேட்போருமச்சி விதைத் தகையாலிட்ட, நற்றருவிற்பொலிகரத்தெங் கோபா லவள்ளலுமிந் நானிலத்தில், மற்றிணையில்சிவபெருமா னரு ளெய்திமகிழ்வினொடு வாழ்கமாதோ.

திருச்சிற்றம்பலம்.

